

ஸூர்யம ஸுந்தர லோகநாத மம்ருதம் வேதாநத ஸாரம்சிவம
ஜஞானம பரஹமமயம ஸுரேச மமலம லோகைக திபாங்குரம |
இந்திராதித்ய நராதிபம ஸுரகுரும த்ரைலோகய சூடாமணியம
பரஹமா விஷ்ணு சிவஸவரூப ஹருதயம் வந்தே ஸதா பாஸகரம ||

அழகிய திருவுருவம் கொண்ட உலகநாதன்; அமுதமயமானவன், வேதங்களின சாரமானவன், சிவ ஸவரூபன், ஞானததின் திருவுருவன; ப்ரஹம்மமயமானவன், தேவதைகளின் தலைவன், குறறமற்றவன்; உலகததிறகு ஒரு பேரொளியானவன், இந்திரன், தேவர்களள, மனிதர்களின தலைவன், தேவர்களின் குரு, மூன்றுலகங்களின் சூடாமணி, பிரம்ம, விஷ்ணு, சிவன் ஆகியோரின் இதயவாசன் போன்ற பல பெருமைகளைகொண்ட இநத சூரிய பகவானை எனறும் வணங்கி வழிபடுவோமாக.

ஜனவரி, 1985

# ஸப்தகிரி

இதழ் 8 மலா 15

தனிபபிரதி ரூ. 1 வருடச் சந்தா ரூ. 12

## உள்ளுறை

பககம



---

### அட்டைப்பட விளக்கம்

முகபபில : முத்துக்கவசத்தில் ஸ்ரீ வேங்கடேஸ்வரர்.
பின்னட்டையில் : புத்தாண்டு வாழ்த்துச் சித்திரம்.

---

சிறப்பாசிரியர்
திரு. எஸ். லக்ஷ்மிநாராயணா
I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர்.
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
THE WELFARE OFFICER
Publication Section, T.T.D.
K. T. Road,
TIRUPATI.

# உங்களுடன்..

பொழுது விடிகின்றது. ஆதவன் தன் அறபுதக் கிரணங்களை விரிக்க எழுகின்றான். மனிதன் தன் அன்றைய வாழ்க்கையை நடத்த ஓடுகின்றான். உச்சி வெய்யிலில் உடம்பில வேர்வை ஆறுய்ப பெருகுகின்றது. மாலை வந்ததும் மனிதன் தன் இருப்பிடத்தை நோக்கி ஓய்வுக்காக ஓடுகின்றான். இது ஒரு சாதாரண மனிதனின் அன்றாட வாழ்க்கை ஓட்டம். இந்த ஓட்டம் சீராக நடைபெறுதற்குப பின்னணி யார் என்பதை நம்மில் எத்தனைப் பேர் சிந்தித்தோம. நாம் விடும மூச்சுக்குக் காரணமானவனும, அம்மூச்சு நம் உடம்பில சீராக இயற்குவதற்கும் காரண கர்த்தாவுமான அப்பரம்பொருளின் கண்கண்ட அம்சமாக விளங்கும் அப்பகலவனைப பற்றி நாம் சிந்திந்த நேரம் நம் வாழ்நாளில் சிறிதளவுகூட இல்லை என்றுதான் கூறவேண்டும.

சூர்ய வழிபாடு என்பது பொதுவாக உலத்தின் பல பகுதிகளில ஒரு குறிபபிட்ட வழிபாடாக அமைந்திருந்தது என்பதை உலகத்தின் பழைய நாகரீகங்களாகக் கருதபபடும் எகிபது மறறும் சுமேரியா வாழ்க்கைச் செய்திகளிலிருந்து அறிந்தின்புறலாம் ஆனால் அக்கதிரவன் புற இருட்டை மட்டுமன்றி. ஆன்ம இருட்டை விலக்கிடும் ஒரு மாபெரும் சக்தியாகக் கொள்ளபபட்டு, சிந்தனையினைத் தூண்டும்படியான தத்துவக் கருத்துக்களை சூர்யவழிபாட்டிற்குப பின்னணியாக அமைத்துத் தந்த நம் முன்னோர்களின் மாண்பினைச் சொல்லி மாளாது. வேதங்களும், புராணங்களும் அந்த நவக்கிரக நாயகனின் சிறபபினை அடுக்கடுக்காக விளக்குகின்றன. ''உத்தமோர் ஜோதிருத்தமம்'' என்று (ஒளிகளில் மேலான ஒளிபபிழம்பாக) ரிக்வேதம் புகழும் அச்சூர்யனை, கண்ணன் தன் கீதையில் கூறும்போது ''ஜ்யோதி ஷாம்ரவி ரஸுமான்'' என்று (ஒளிகளில் நான் சூரியனாக இருக்கின்றேன்) அறிவித்து கதிரவனின் ஆற்றலுக்கு பெருமை சேர்க்கின்றார். ''வேதாஹமேதம புருஷம் மகாந்தம், ஆதித்ய வர்ணம் தமஸ: பரஸ்தாத்'' என்று சூர்யனை பரம்பொருளாக புருஷ ஸூக்தம் புகழ்கின்றது. 'ஸூர்ய ஆத்மா ஜகதஸ்தஸ்துஷஸ்ச' என்ற கூற்றுப்படி அனைத்துலக உயிர்களுக்கும் ஆத்மாவாக ஆதவன் அமைந்துள்ளான். வேதத்தின் தாயான காயத்ரியே கர்ம சாக்ஷியான சூர்யனின் வழிபாட்டைத்தான் கூறுகின்றது. ஞாயிற்றின் பெருமையைப் பறைசாற்றும் ''ஆதித்ய ஹ்ருதயத்தின்'' வலிமையால்தான் இராமபிரான் இராவணனை அழித்ததாக இராமாயணம் நமக்குக் கூறுகின்றது. அது போன்றே, சூர்ய வழிபாட்டின்மூலம் திரௌபதி அக்ஷய பாத்திரம் கிடைக்கப் பெற்றதை பாரதம் அறிவிக்கின்றது. சுக்ல யஜுர் வேதத்தைப்பற்றி அறிந்து கொள்ள யாக்ஞவல்கியர் பகலவனின் பாதத்தைத்தான அடி பணிந்தார். இம்மைக்கும் மறுமைக்கும் ஓர் ஆன்ம வழிகாட்டியாக இருக்கின்ற ஆதவனின் அருமையினை விளக்கிடும சௌர மதத்தை ஷண்மதங்களில் ஒன்றாக சங்கரர் சேர்த்து, சூர்ய வழிபாட்டின் முக்கியத்துவத்தை உணர்த்தினார். பொழுது மலர்ந்தது முதல சாயும் வரை பல்வேறு கால நேரங்களில் சூர்யனின் ஒளிக்கிரணங்கள் உலகில் உள்ள உயிர்கள் பெறும் ரசாயன மாற்றங்களுக்குக் காரணமாக அமைகின்றன. சூர்யனை வழிபட்டு தன் தொழு நோயைக் குணப்படுத்திக் கொண்ட சம்பாவின் கதையினைக் கூறும் பவிஷ்ய புராணமும், ஆதவனின் ஒளிக்கிரணங்களால இழந்த கண்களைப் பெற்ற ஹர்ஷவர்த்தனனின் அரசுக் கவியான மயூரனின் சரித்திரச் செய்தியும் இன்றைய விஞ்ஞான ஆராய்ச்சிகளுக்கு ஒரு சில அனுபவ முன்னோடிகளாம்.

இத்தகு பெருமைமிகு சூர்யனை பிரம்மன், விஷ்ணு, சிவன் ஆகியோரின் மொத்த உருவமாக வழிபட்டது மட்டுமின்றி, அச்சூரய மண்டல நாயகனாக திருமாலை வழிபட்டு அவனை சூர்ய நாராயணனாக ஏற்றுக் கொண்டது நமது இந்து சமய உலகம. ஆகவே திருமகள் கேள்வனின் திருவருளின் இருப்பிடமாகக் கொண்டு விளங்கும் இந்நவக்கிரக நாயகனாக விளங்கிடும் சூர்ய பகவானை, அவனுக்குரிய சிறந்த நாளாகக் கருதப்படும் வரும் ரத சப்தமி அன்று வணங்கி வழிபடுவோமாக'

வையகம் படைத்தல் செய்மலரின் அண்ணலும<br>
பொய்யறும் மாயனும புகல் முக்கண்ணனும்<br>
ஐய செங்கதிர்களோர் ஆயிரம் திகழ<br>
வெய்யனும் விளம்பும் நூல்களே.



## ஆண்டு விழா

பெங்களூரில் உள்ள தி.தி தேவஸ்தானத்தாரின் தகவலவிறிப்புநிலையத்தின் 27–வது ஆண்டு விழா வெகு விமரிசையாக 6—12—84 அன்று கொண்டாடப்பட்டது. திருமதி. அனந்தலக்ஷ்மி நடராஜன் அவர்களின் இறை வணக்கத்தைத் தொடர்நது விழாவிற்கு வருகை புரிநதோரை, உள்ளூர் ஆலோசனைக்குழு தலைவா தீனபந்து திரு. வி. ஆர். நாயுடு அவர்கள் வரவேற்றுா. தி. தி. தே. நிலையத்தின் உள்ளூா ஆலோசனைக் குழுவின் செயலர் திரு. எஸ். ஆர். ஸ்ரீநிவாசன் அவர்கள் ஆண்டறிக்கையினை வாசிததாா. இவ விழாவிற்குத் தலைமை வகித்து உரையாற்றியகர்நாடக மாநில ஆளுநர் மாண்புமிகு. ஏ.என. பானர்ஜி அவர்கள் இன்றைய இநதியா இருக்கும் சூழ்நிலையில் பக்தியின அவசியத்தைக் குறிப்பிட்டு, ஆதிசங்கரர், மத்வர், ராமாநுஜர் மற்றும் சைதன்யர் போன்ற மதததலைவர்கள், சமய ஞானிகளின சமயத்தொண்டினை விளக்கிக் கூறி, அவாகள் எவ்வாறு இன்றைய தலைமுறையினர்க்கு வழிகாட்டியாக உள்ளனா எனபதையும எடுத்துக் கூறினர். இந்த நிலையத்தின் மூலம் தி. தி. தேவஸதானம் ஆற்றி வரும் அருந்தொண்டினைப் பாராட்டிப் பேசினர்.

இவ்விழாவில் பங்கேற்று உரையாற்றிய கர்நாடக மாநில வருவாயத துறை அமைச்சா பேராசிரியர் லக்ஷ்மி ஸாகர் அவர்கள், இநநிலையததின் செயல்முறைகளைப பாராட்டியதைத தொடர்ந்து வடமொழியின அவசியத்தையும, அதன பெருமையினையும் விளக்கிப் பேசினா. தி. தி. தே. இணை செயலாட்சித் தலைவர் திரு. சுப்பராயலு அவர்கள பேசுகையில் பெங்களூர் தி.தி.தே. தகவலறிவிப்பு நிலையம் மேலும் நன்கு செயற்பட தி. தி. தேவஸ்தான மேலாணமை தன்னாலியன்ற உதவிகளை மேலும செய்து தரும என்று குறிபபிட்டு, விழாவிற்கு வருகை புரிநதோர்ககு நன்றி நவின்றார். இறுதியில், இவ விழா சம்பநதப்பட்டு ஏறபாடு செயயப்பட்ட சுப்ரபாத போட்டியில வெற்றி பெறறவர்களுக்கு, ஆளுநரின துணைவியார் திருமதி. சுபரத்பானாஜி அவர்கள் தேவஸதானத்தின் சார்பில பரிசுகள் வழஙகினர்.

## வாழ்த்துக்கள்

ஸப்தகிரி வாசகாகளுககும், விறபனைப் பிரதிநிதிகளுக்கும், எழுததாளா பெருமக்களுக்கும், விளம்பரதாராகளுக்கும் எஙகளுடைய நனறி கலந்த புத்தாணடு நல்வாழத்துக்களை தி. தி. தேவஸதானததின் சார்பில தெரிவித்துக் கொளகின்றோம.

—ஆசிரியா.

# ஸ்ரீ ஆண்டாள் குறிப்பிடும் சமுதாயப் பழக்க வழக்கங்கள்



அவனியுய்ய பைந்தமிழ நாட்டு மல்லி நாட்டுத் திருவில்லிப்புத்தூரிலே பட்டர்பிரான் பைங்கொடியாய அவதரித்த அன்னை ஆண்டாளின் அருட்பாககள் இமமைப பயனும், மறுமைப பயனுமளிப்பன என பது சானறோரின் ஆய்வுரை, அறிவுரை, அருளுரை பாடும வாய மணக்கும பாககள மடடுமலல அவை, வைகுணட வாழவளிககும் வல்லமையுள்ள திருப்பாக்களுமாகும்.

மாாகழி நோனபு

இம்மைச் செயயும் நறகாரியங்கள மறுமையிலும நற-யனளிப்பன. இம்மையில்—மனித வாழ்வில்-நாம் செயயுங் காரியஙகளில் நோனபும் ஒன்று. நோன்புகளில் கையாளப்படும் பழக்கங்களினல் உடறபிணியும், உளப் பிணியும் உயிர்ப்பிணியும் நீங்கும். அநநாடகளில் உணவுக்கட்டுப்பாடும், மனக்கட்டுப்பாடும்கையாளப்படுகின்றன. ஆகவே இநதிய நாட்டு மககள்-இந்துக்கள் - தம வாழககையில பலவித நோனபுகளை பணடுதொடடே கைக கொணடு வருகினறனர். அவை விரதஙகளெனவும வழஙகபபடுகினறன. உணணாவிரதமும, மௌன விரதமும் குறிப்பிடததககன அததகைய நற பயனளிக்கும நோனபுகளில ''மாாகழி நோன்பும்'' ஒன்று இநநோனபு மாாகழி மாதததில சைவ, வைணவப பெருமககளால சிரத்தையுடன் கையாளபபட்டு வந்ததை மணிவாசகா, ஆணடாள பாடல்களாலறியலாம. இனறும கிராமப் பகுதிகளிலும, நகர்ப்புறஙகளிலும் பனிவாட்டினும் அதிகாலையில் இறையருடபாக்களைப் பாடிக்கொணட மககள நகர்வலம் வருவதைக கணடுமகிழலாம். அசைவ உணவு உணபவர்களும இம்மாதத்தில் அவறறை நீக்கி வைககின்றனர். ஆலயங்களில் அதிகாலையில் பூஜைகளும, வழிபாடுகளும நடைபெறுகின்றன மாாகழி மாதத்தில கடைசி நாளனறு போக்கித்திருநாள் கொணடாடி மனிதன் புறபபகுதிகளைச் சுத்தம செய்கிறுன். ஆனல மாாகழி மாதம முப்பது நாளும் அதிகாலையில சூரியன் எழுமுன் நீராடி பஜனைப் பாடலகளைப் பாடி அகத்தினைத் துப்புரவு செயகின்றனர். சங்க காலததில் இதனையே தை நோன்பு என்றனா போலும. ஸ்ரீ கிருஷ்ண பகவானும ''மாதங்களில் நான் மார்கழி''யெனக கூறியுள்ளாா. படடர்பிரான் பெற றெடுத்த பைங்கொடியின் காலத்தில் மார்கழி நோன்பு சிறபபாகக கொணடாடபபடடது. 'சீர்மலகும ஆயாபாடிச சிறுமியாகளை' ஆணடாள ''மாாகழித திஙகள் மதி நிறைநத நன்னளில'' அதிகாலையில நீராட அழைககின்றுள சிறுமியரும கனனியரும அதிகாலையிலெழுந்து ஒருவா மற்றொருவரை எழுப்பி, அழைததுச செலவா இவற்றை

கீசுகீ சென றெங்கும ஆனைச சாததன்
கலைநது
பேசின பேசசரவம கேட்டிலையோ?
பேயபபெணணே' (திருபபாவை 7)
புளளும சிலமபினகாண புள்ளரையன
கோயிலில
வெளளை விளிசங்கின பேரரவம்
கேடடிலையோ (திருப்பா-6)

திரு. சீ. இலட்சுமணன், எம்.ஏ.பி.எட்.
சிங்கம்புணரி.

எனும் அடிகளால் அறியலாம்.

நெய்யுண்ணோம, பாலுண்ணோம்
நாட்காலே நீராடி
மையிட்டெழுதோம, மலரிட்டு
நாமுடியோம்
செய்யாதன செய்யோம் தீக்குறளைச்
சென்றோதோம்
ஐயமும் பிச்சையும ஆந்தனையும்
கைகாட்டி
உய்யுமாறெண்ணி யுகந்தேலோ
ரெம்பாவாய் —திருப்பா-2

மார்கழி மாதத்தில் மங்கையர்கள் பாலையும் நெய்யையும் உண்ணுது ஒதுக்கினர். மலர் சூடிக் கூந்தலைப் பின்னித் தம்மை யழகுபடுத்திக் கொள்ளவில்லை. மணணுண்டு மண்ணையும் விண்ணையும் வாய்திறந்து மற்றவர்க்குக் காட்டிய மதுசூதனனுக்குரிய மார்கழித் திங்களில் தங்களை அலங்கரித்துக கொண்டால், காணும் ஆடவர் கருத்தில் கடவுளுக்குப்பதில் காமனிடங் கொள்வாரென அஞ்சினர் போலும். திறந்தவாய் மூடாது தீக்குறளைப் பேசுவோரும புனிதத் திங்களைப் போற்றி வாய்மூடியிருந்தனர். கோவிநதா! கோவிந்தா !! எனக்கூறி கையேந்தி நிற்போாக்கெல்லாம் பிசசையிட்டனர் என்பன போன்ற செயதிகளை ஆண்டாள் குறித்துள்ளாள்.

தை நீராடல

சங்க காலத்தில் தைத்திருநாளே சிறப்பாகக் கொணடாடப்பட்டது. மார்கழி நோன்பை தை மாதத்திலும் கொணடாடினர். இவற்றை

"வான் பெயல் நனைந்த புறத்த
நோனபியர்
தையூ ணிருக்கையில் தோனறு
நாடன் "—(நற்றிணை 23)

"தைஇத் திஙகள தண் கயம படியும்
பெருந்தோள் குறுமகள "
—(நற்றிணை 80)

எனும் அடிகளால் தெரிந்து கொள்ளலாம்.

ஆண்டாள் காலத்திலும் தை நோன்பு சிறப்பாகக கொண்டாடப் பட்டது.

இத்திங்களில் காமதேவனையும் வழிபடுகின்றனர். "தைபிறந்தால் வழி பிறக்குமல்லவா?" வீட்டை மெழுகி சுத்தம் செய்வர்; தெரு வெங்கும் நுன்மணல் பரப்பி; முள்ளில்லாச் சுள்ளி கொண்டு எரிமடுத்து காம தேவனை நோற்பர். இதனை

தையொரு திங்களும தரைவிளக்கி
மண்டலமிட்டு (தையொரு-1)
ஐய நுண் மணற் கொண்டு
தெருவணிந்து (தை-1)
வெள்ளை நுண் மணற் கொண்டு
தெருவணிந்து
முள்ளுமில லாச்சுள்ளி யெரிமடுத்து
முயன் றுன்னை நோற்கின்றேன்
காமதேவா (தையொரு-2)

எனுமடிகளால் அறியலாம்.

தங்களுக்குத் திருமாலே திருமண மாலை சூட்ட வேணடும். சின்னஞ் சிறு பல்பிணிச் சிற்றுயிர்ாம் மானிடர் மணவாளனக வரக்கூடாது என்று நோற்றனர்.

"என்றட மூலைகள் மானிடவர்கென்று
பேசுப்படில வாழகிலேன் கண்டாய்"
(கூ 5)

என்கின்றார் சூடிக் கொடுத்த சுடர்க் கொடி.

......அஙகோர் கரியலற
மருபபொசித்து புள்வாய் பிளந்த
மணிவண்ணனற் கென்னை வகுத்திட்டே
னென்று
பொருபபனன மாடம் பொலிந்து
தோன்றும புதுவையர் கோன விட்டு
சித்தன கோதை (கூ 10)

என்று தமிழ் பாவிசைக்கின்றாள.

திருமண நிகழ்ச்சி

ஆனறோர் மனித வாழ்க்கையை பிரமமச்சரியம, இலலறம், சநநியாசம, வானப்பிரஸ்தமென நான்காகப பிரிததனர். வளளுவப் பெருநதகை இலலறம துறவறமென இரு பிரிவுகளை வகுதது இல்லறத்தை முதறகண வைததாா. இலலறத்தின தொடக்கம்தான் திருமணம. இது மனித வாழககையின் முக்கிய நிகழச்சியாகும. தனித்து தானென்ற முனைப்புடன் வாழந்தவனுக்கு மனைவி மக்கள், தன் குடும்பம், உறவு, சுற்றம், நமா, நாட்டவர் எனும் விரிநத மனப் பான்மையை தருவது இல் வாழக்கைதானே. திருமணச் சடங்குகள காலந்தோறும் மாறி மாறி வந்துள்ளன: அகமும் புறமும் சிறந்து விளங்கிய சங்க காலத்தில் புரோகிதர், வேள்வி முதலியன இல்லை.

புதல்வற பயந்த திதலை அவ்வயிற்று
வாலிழை மகளிர் நால்வர் கூடி
கறபின் வழாஅ நற்பல உதவிப்
பெற்றோற் பெட்கும் பிணையை ஆக

என 86ஆம் பாட்டில் நல்லாவூர் கிழார் கூறுவதின் மூலம் உள்ளங்கை நெல்லிக்கனியாக உணரலாம். ஆனால் சங்கமருவிய காலத்தில் மாற்றங்கள தோன்றிவிட்டன. வேதம் வல்ல அந்தணர்கள் மந்திரங்கள ஓதினர். தீ வளர்க்கப்பட்டு வேள்வி செய்தனர். தீயை வலம் வந்து தெய்வந் தொழுதனர். இதனைச் சிலம்பு (1-52-53) குறிககிறது.

" மாமுது பாப்பான் மறைவழி காட்டிடத
தீவலம் செய்வது........."

சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாள் காலத்தில் நிகழச்சிப் பெருக்கமும் மாற்றங்களு மேற்பட்டுள்ளதை அன்னை ஆண்டாளின அருந்தமிழ்ப் பாக்கள் மூலம் அறிநது மகிழலாம்.

திருமணத்திற்காக மிகப் பெரிய பந்தல்கள் அமைககபபடடன. "பாளை கமுகு பரிசுடைப் பநத" லமைக்கப்பட்டது. காயாம்பூ வணணனும் கணணன் "வாரணம் ஆயிரம் சூழ" நடந்து வநதான். பூரண பொற்குடம் வைத்து, கதிரொளி தீபமும் கலசமுடனேநதி சதிரிள மங்கையர் தாம் வநது எதிர் கொணடழைததனா. 'வாய் நாலார் நல்ல மறையோதி மந்திரங்க' ளோதினா. "நாற்றிசைத் தீர்த்தங் கொணர்நது நனநல்கி பார்ப்பனச சிட்டர்கள் பலலார் எடுத்தேத்தினர்" "மந்திரக கோடியுடுதத" ஆண்டாளை மணமாலை சூட்டி மகிழநதான் மாநிலம செய்த மாதவத்தால வநத,மாதவன அபபோது "மத்தளம கொட்டியது, வரிசங்கு நின றூதியது" "காய்சின மாகளிறனனன கைபறறி தீவலஞ் செய்தான்" "செம்மையுடையான திருககை பற்றி அமமி மிதித்து அருநததி பார்த்தாள் அமுதத்தமிழ்பாடிய ஆண்டாள்" இவற்றிலிருநது ஆணடாள் காலத்துச் சமுதாய அமைப்பு பழக்க வழக்கங்களை நனகு அறிந்து கொள்ளலாம்.



# சச்சிதானந்தம்

ஆனந்தமான தலைப்பு. சொற்றொடர். ஆம். சத்—சித்—ஆனந்தம் என்னும் மூன்று சொற்கள் சேர்ந்த தொடர்.

உயிரினங்களிலே சிறந்தது, அறிவு மிக்கது, ஆற்றலுடையது மனித இனம். படிப்படியாக வளர்ச்சி பெற்ற மனித இனம் மேலும் வளர்ச்சி பெற்று வளமடைய வேண்டாமா? ஆம், அந்த எல்லைதான் சச்சிதானந்தம்.

" உறங்குவது போலும் சாக்காடு உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு "

இக்குறள் உணர்த்துவது போலே பிறந்து இறந்து, பிறந்து இறந்து... உழலவேண்டுமா? அதிதமான அறிவைப் படைத்த மனிதன் இதற்கோர் முடிவு, 'எல்லை' காணவேண்டாமா? அதுதான் சச்சிதானந்தம்.

ஏதோ ஒரு பரம்பொருள் இருக்கின்றது. 'சிவன்' என்றும் 'நாராணன்' என்றும் கூறப்படுகிறது. (மறைய கடவுளர் இவ்விரணடினிலே ஐக்கியம் எனக் கொள்வோம்). அத்தகைய பரம்பொருளின் திருவடி நிழலில் நீங்காமல் நித்திய சூரிகளாயிருப்பதும், அப்பரம்பொருளுடனே ஒன்றி விடுவதுமதான் எல்லையின் முடிவாகும், ஆனந்தம ஆகும். இன்பத்தின் முதிர்ச்சி, மகிழ்ச்சியின மிகுதி, பேரின்பம என்பதெல்லாம் தான ஆனநதம் ஆகும்.

சக்தி இருந்தால்தான் ஏதும செய்ய இயலும். அதுவே 'சத்' ஆகும். சக்தி என்பது வலிமை. ஐந்த வித்தான் ஆற்றலை தேர்ந்த சததாகும். 'சினம் அடஙகக கற்றலும் சித்தியெல்லாம் பெற்றலும் மன மடங்கக் கல்லார்க்கு வாய் ஏன் பராபரமே' என்பர் தாயுமானவர். மனமடங்கவேண்டும். அதன் மூலம் ஐம்புலன்கள் அடங்கவேண்டும். அநத நிலையில் 'சத்' ஆகிறான்.

நினைப்பதை எய்துவது சித்தி. இதுவே 'சித்' ஆகும். அவவாறு எய்துதற்கு ஆற்றல் வேண்டும. மேற்கண்டவாறு ஆற்றல பெற்று சித்தி எய்துகின்ற நிலையிலே 'சிததன்' ஆகிறான். இராமலிங்க அடிகளார் முதல் இரவிலேயே தனது மனைவிக்கு திருவாசகம் போதித்து இரவைப் போக்கினவர். அதுதான் அவர் பெற்ற 'சத்'. இதுமட்டுமல்ல. பல சித்துகள் அறிவார். ஆனால் அதனில் நாட்டம் இலார் ஏன்? அதனைவிட மேலான ஆனந்தநிலை எய்தவேண்டாமா அதற்காகவே சித்துக்களை ஒதுக்கினார்.

அதுபோலே சித்தன் ஆன நிலையிலே மேற கொண்டு முயற்சி செய்து ஆனந்தம் பெறவேண்டும். அந்த ஆனந்த நிலையை 'கணடாரும விண்டதில்லை விணடாரும் கணடதில்லை பூரணநிலை அடைந்து இறைவனோடு 'நீ வேறெனாதிருகக, நான வேறெனாதிருகக' எனனும அருணகிரியாரைப் போலவும், 'தநதது என்னை, கொண்டது உன்னை, சங்கரா ஆர்கொலோ சதுரர்' எனும் நாயன்மார் போலவும் ஒன்றுபட்ட ஆனந்த நிலை எய்த வேண்டுமானால், மனிதப் பண்புகள் கொணடு, மனமடஙகி, இறைவனை வழிபட்டு, சித்தி எய்தி, அவனோடு ஒன்றி விடும் 'சச்சிதானநதம' பெற நாம் பாடுபடவேணடும்.

விசிஷ்டாத்வைத வைணவ நெறியிலே வந்த ஆழ்வார்களிலே 'தொண்டரப் பொடியாழ்வார் என்னும விப்ரநாராயணர் நமக்குத் தநதருளிய மார்கழி மாதங்களிலே வீதிகள் தோறும் முழங்கும் திருப்பள்ளியெழுச்சி பத்து பாசுரஙகளும் (ஏனைய நாட்களிலே பாகவதர்களால் தினமும் அநுசந்திககப்படுவது), திருமாலை வணங்க 'திருமாலை' என்னும் பெயரிலே 45 பாசுரங்களும் அருளியுள்ளார்.

திருமாலை பாசுரங்கள மிகமிக எளிமையானவை. கருத்து ஆழம் மிக்கவை. எனவேதான் 'திருமாலை அறியார் திருமாலை அறியார்' என்று வழங்குவது உண்டு. அந்தத் திருமாலையிலே முதல் பாசுரத்திலேயே சச்சிதானந்தம் அடைகிறார் ஆழ்வார்.

அத்வைத அற்புத சொற்றொடர் வைணவத்திறகுப் பொருந்துவதாவது? எனறு பல பாகவத சிரோன்மணிகள் அடியேனை கோபமாகநோக்குவது புரிகிறது. பாசுர விளக்கம் காண்போம். பின்னர் சிந்திப்போம். உயிர் உடலை விட்டுப் பிரியும் நாள் வந்த உடனே எமன் தன் வேலையைச் செய்கிறான். அந்த முறைப்படியே தொண்டரடிப்பொடியாரின் ஆவியைக் கொணர தன் பணியாளான கிங்கரனை அனுப்பினான் எமன். ஆழ்வார் பார்வையின் எதிர் நிற்காமல் ஓடிவந்ததைக்கண்டுகோபம்கொண்ட எமன் தன் படாக்களின் ஒரு பெருங் குழுவினையே ஏவினான் உயிர்கொணர. எம படாக்களின் படை வந்தது. ஆழ்வார கணடார். எல்லோரையும் நெருங்கி வட்டமாக நிறகச் சொன்னார். அவர்களும நின்றனர். உடனே வட்டத்தின் தலைகள் மேல் ஏறிநின்று நாம சங்கீர்த்தனம செய்து கொணடே ஆனந்தக் கூததாடுகிறார். இதுவே அவர் பெற்ற பேரின்பம். அதாவது ஆனநதம் ஆகும்.

ஆனந்தம் அடைய 'சித்' வேண்டும் அல்லவா? நமமை எப்படியெல்லாமோ? ஆட்டி வைககும் 'கலி'

ரகு

தன்னை கடக்கப் பாய்ந்தார். 'கலி' என்பது மயக்கம்-தெளியாத மயக்கம் நல்லது தீயது அறியாத மயக்கம். இல்லதை உள்ளதெனவும், உள்ள தை இல்லதெனவும் எண்ணும் மயக்கம்-கானலை நீரென மதிக்கும் மயக்கம். மெய்யிலா உடலுக்கு 'மெய்' எனப் பெயரிட்டு அழைக்கும் மயக்கம்-இன்னும் பலப்பல மயககங்கள் கொண்ட 'கலி' தன்னை கடக்கப் பாய்ந்தார். அதுவே பெரிய 'சித்' தாகும்.

நடனமாடும ஆழ்வாரின் எதிரில் வந்து நின்ற 'நாராயணன' எனும் பரம்பொருள் ஆழ்வாரைப்பார்த்து, 'உய்ய வுலகு படைக்க வேணடி உந்தியில் தோற்றினேன் நான்முகனை, வையமனிதரைப் பொய்யென்றெண்ணி காலனையும் உடனேபடைத்தேன் அல்லவா? என்ஞல் தோற்றுவிக்கப்பட்ட எனது படாக்களின் தலைகள் மேல ஆடுவதும் அவர்களை இம்சிப்பதும் தவறலலவா?' என்ருர்.

'மூவுலகு உணடுமிழந்த முதல்வா! நின் நாமம் கற்ற ஆவலிப்பு' என்று பதிலிறுககின்ருர் ஆழ்வார். ஆண்டவன் மகிழகிருன். தன திருவடி நிழலிலே நிதயசூரிகளில் ஒருவஞக ஆழ்வாரைச் சேர்த்துக் கொள்கிருர். இதுதானே 'ஆனந்தம்'

இந்த ஆனந்தம் தாஞகவே வருமா? சுலபமாகக் கிடைக்குமா? 'சித்' வேண்டாமா? கலி தன்னை கடக்கப் பாயந்த 'சித்' அடைந்த விவரம் கண்டோம். அந்த 'சித்' அடைவதற்கு 'சத்' வேணடாமா'' ஆம். நிச்சயம் வேண்டும். அந்த ''சத்'' எத்தகையது? எபபடி வந்தது? 'காவலில் புலனை வைத்து'? என அருள்கிருர். புலனடக்கத்தின் மூலம் மன அடக்கம் பெறுகிருர்.

சுவறறிலே ஒட்டியுள்ள போஸ்டரை நடுரோட்டில் நின்று நீண்ட நேரம் காணும் கோணல் நோக்கினை மாற்றி, இறைவனின் திருத்தலங்களையும் திருவடிகளையும் காணுதல் வேணடும்.

இறை தொடர்பான வாக்கியங்கள், பாடல்களையே கேட்டல் வேண்டும், நுகர்தலும் வேண்டும். இறை மணத்தை கால்களிஞல் ஆலய வலம வந்து, கைகளிஞல் கூப்பித்தொழுது சரீரத்திஞல் சாஷ்டாங்க நமஸ்காரம் செய்வதுடன் வாயிஞல் பாடவேணடும். மனத்திஞல் சிந்திக்கவும் வேணடும்.

இவ்வாறு புலன்களைக் காவல்வைப்பது மிகவும் சிரமமானது. ஒரு புலனை அடக்கவே இயலாது. ஐம்புலன அடக்கம் என்பது அற்புத சாதனை அன்ருே அதுதான் 'சத்' எனப்படும.

எனவே ஆழவார் கருத்துப்படி 'புலனடக்கம் ஆகிய 'சத்' திஞலே, 'கலி தன்னை கடக்கப் பாயும்' சித்தி பெற்று, நமனதமர் தலைகள் மீது நாவலிட்டு உழிதரும் மகிழ்ச்சியுடன் இறைவன திருவடி சார்ந்து, 'ஆனந்தம்' எய்துவது, எமபெருமானின் நாம-ஸ்மரணையின் மகிமை என்பதை வலியுறுததுகிருர். இனிப்பாசுரததைப பாாப்போமா!

'' காவலில் புலனை வைத்து கலிதனனை
கடக்கப பாய்ந்து
நாவலிட்டு உழிதருகினருேம
நமன தமர்தலைகள் மீதே
மூவுலகு உண்டுமிழந்த முதலவ!
நினநாமம கறற
ஆவலிபபுடைமை கணடாய்
அரங்கமாநகருளானே ''

இல்லறத்தை வெறுத்து, பிரம்மசரியத்திலேயே நந்தவனம் அமைத்து திருத்துழாய்த் தொண்டு செய்து வந்த விப்பரநாராயணரின் நேர்மையான வாழவிலே தேவதேவி குறுக்கிட்டாள். திருடன் என்னும அவப்பெயருடன் சிறை, சவுக்கடி கிடைத்தது. இந்த அனுபவத்தை வைத்துத் தான் முதல் பாசுரத்தின் முதல சொற்ருெடராக, 'காவலில புலனை வைத்து' எனத்தொடங்குகிருர.

எனவே மனமடககி, புலனடக்கி, கலிகடநது, இறைவனின நாமம கற்று, நாததழுமபெழ அழைததால பேரானந்தப் பெருநிலையான 'சசசிதானநதம' அடையலாம்.

இதனைப்படிதது, அனைவரும் பரிபூரண ஆனநத பரவசநிலை அடைய வேணடும் எனபதே அடியனேன கருத்து.

'' எண்ணிய எண்ணியாஙகு எயதுவ
எண்ணியா
திண்ணியராகப பெறின '' அன்ருே!

எல்லோரும திண்ணியராதல் வேண்டும என எம்பெருமானை இறைஞ்சுகின்றனன



## அறிவிப்பு

திருமலையில் கல்யாணுேற்சவம் போன்ற ஆர்ஜித சேவைகளுககாக பக்தர்களால எம்.ஓ. மூலம் அனுப்பப்படும் தொகையை தி. தி. தேவஸ்தானம் ஏற்றுக் கொண்டாலும, அம்முறை சில நிருவாக சிக்கல்களையும், கால தாமதத்தையும் ஏற்படுத்துவதால், பக்தர்கள், அனுப்ப வேண்டிய தொகையை டி. டி. (D. D) மூலம் அனுப்பிஞல் மேலாணமைக்கு அம்முறை உதவியாக அமையும். மேலும் ஆந்திரா வங்கி மற்றும் சில வங்கிகள் இது போன்று தி. தி. தேவஸதானத்தின் பெயரில் வழங்கப்படும் டி.டி.களுக்கு எவ்விதக் கட்டணமும் பெற்றுக் கொள்வதில்லை.

# கோதையின் பாரிப்பு

நாம் ஒரு வேலையைச் செய்ய முற்படும்போது அது எவ்வாறு செய்யப் படவேண்டுமென்று திட்டமிட்டு செயல்படுதல் வெற்றியை அளிக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. பாரிப்பு என்னும் சொல் தமிழ் மொழியில் மற்ற சமயத்தினரை விட வைணவ சமயத்தில் அதிகமாக ஆளப்படுகிறது. தாம் ஆசைப் படும் பொருள் இப்படியாக இருக்க வேண்டுமென்று முன்னதாக தன் எண்ணத்தைப் பரப்புவது எனப் பொருள்படும். உதாரணமாக நாம் எம்பெருமானுக்குக் கைங்கர்யம் செய்ய ஆசை கொள்கிறோம். அக் கைங்கர்யம் எவ்விதமாகச் செய்தால் எம்பெருமானுக்கு உகப்பாகும் என்பதைச் சிந்தித்து அதன்படி நாம் எண்ணமிடுதல் வேண்டும்.

பிரபந்த ஜநகூடஸ்தரான நம்மாழ்வார் தன் திருவாய்மொழியில் பாரிப்பின் எல்லையைக்காட்டுகின்றார்

ஒழிவில் காலமெல்லாம் உடனாய்<br>மன்னி<br>வழுவிலா வடிமை செய்யவேண்டு<br>நாம்<br>தெழிகுரலருவித் திருவேங்கடத்து<br>எழிலகொள் சோதி எந்தை தந்தை<br>தந்தைக்கே 3.3..1

பூலோக வைகுண்டமான திருவேஙகடமலையில் வீற்றிருக்கும் திருவேங்கடவனுக்கு வழுவில்லாத, குற்றமற்ற கைங்கர்யத்தைச் செய்தல் வேண்டும் என்று பாரிக்கிறார். மேற்படி பாசுரததின் ஆறுயிரப்படி உரையில் ''இப்படி நிரவதிக ஸௌந்தர்யாதி கல்யாண விசிஷ்டனை திருவேங்கடமுடையானைக் கொண்டு லப்தாத்மஸஞ்ஜீவந ராயனுடைய குணங்களாலே தாஸ்யமுபாகதராயிருந்த ஆழ்வார், 'திருவேங்கடமுடையானை பூஜிக்க வேணும்' என்று தம்முடைய திருவுள்ளத்தாலே கோலி ..'' என்கிறார். இங்குக் கோலி என்பது பாரிப்பு என்ற பொருள் மேற்கொண்டு உரை செல்கின்றது. இவ்வாறே தமது திருவிருத்தத்திலும்

காவியும் நீலமும் வேலும் கயலும்<br>பலபலவென்று<br>ஆவியின் தன்மை யளவலல பாரிப்பு-<br>அசுரைச் செற்ற<br>மாவியம் புள்வல்ல மாதவன்<br>கோவிந்தன வேங்கடஞ்சேர்<br>தூவியம் பேடையன்னாள் கண்களாய<br>துணை மலரே.

என்ற பாசுரத்தால் தன்னை வருத்துவதற்கு அடிகோலிய பரப்பு தனது உயிரின் தன்மைக்கு ஏற்ற அளவற்றது; இந்த மெல்லிய உயிரை மாய்ப்பதற்கு அத்துணை முயற்சி தேவையற்றது என்கிறார்; இங்குப் பரப்பு என்கிற பொருளில் பாரிப்பு வநதது.

இப்பாசுரத்திற்கு உள்ளுறை பொருளாக (அந்வயம் செய்துள்ளார்) ஸ்வாமி அண்ணங்கராசாரியர், ஸ்வாபதேசத்தில் ஆழ்வாரின் ஞான விளக்கத்தை விளக்குகிறார்: 'அசுரைச் செற்ற..... வேங்கடஞ் சேர்' என்றதனால் திருமாலின் யோகஸ்தானமான திருமலையில் ஈடுபாடுடையவர் ஆழ்வார் எனபது விளங்குகிறது; வேங்கடஞ்சேர் என்றது வேங்கடத்தை இடைவிடாது நினைப்பவரென்றவாறு; தூவியம் பேடையன்னாள் என்பதனால் ஆழ்வாரின் சுத்தமான ஸ்வபாவமும் ஜ்ஞானானுஷ்டரூபமான மேற்கதி செல்லுங் கருவி யிரணடையுமுடைமையையும் பாரதந்திரியமும் குறிக்கப்பட்டன. 'வேங்கடஞ்சேர் தூவியம் பேடை' என்று அலர்மேல்மங்கைத் தாயாரைச் சொல்லி, அவளுடன் இவருடைய ஸ்வரூபத்துக்கு ஒப்புமைச் சொல்லப்பட்டது. 'கணகளாய துணைமலர்' என்பது தமக்கும் தம் மடியார்க்கும் துணையாகிற பரந்த ஞானம் முதலியவை ஆகும். காவி, நீலம், வேல் முதலியவற்றின் முறையே ரஜோ, தமோ, ஸத்வ குணங்களைச் சொல்லி அவற்றைக் கடந்தமையை விளக்குகிறது. கயல் என்பது ஜடபதார்த்தங்களிற் சேராமையை அறிவிக்கிறது. சஞ்சலத் தன்மையில்லாமையும் சொல்லுகிறது.

ஆழ்வார்கள் எம்பெருமானின் கருணையினால் மயர்வற மதிநல மருளப் பெற்று எம்பெருமானைக் கண்டார்கள். ஆழ்வார்கள் புருஷோத்தமனைப் பற்றத் தம்மைப் பெண்களாக எண்ணி அவனைப் பெற ஆசைப்பட்டனர். அக்காலங்களில் ஆழ்வார்கள் தங்களை நாயகியாக பாவித்து அதன்படி எம்பெருமானை அடைந்தனர். அவர்களைப் போலல்லாது ஆண்டாள் எம்பெருமானைத் தானே எழுப்பித் தன்குறைகளை எடுத்துரைத்தாள்; பெண் பாவனை அவள் பிறப்பேயாதலால் தேவையில்லாது போயிற்று. மேலும் ஆணகளை ஆண்கள விரும்புவதைக் காட்டிலும ஆணகளைப் பெணகள் விரும்புவது (பாரிப்பது) இயற்கையாலே அவளது பெருமை உயர்ந்ததென்பதை நாமே நன்கறியலாம். ஆழ்வார்கள் தம செயலை விஞ்சிய ஆணடாள் 'மார்கழி நீரோட்டம்' என்கிற நோன்பினை (மேற்கொண்டு) எம்பெருமான் பக்கலிலே நின்று 'காலமென்பது உள்ளவரையிலும் நீ இனிப் பிறக்கும் அவதாரங்களிலும் உன்னுடன் பிறக்கவேண்டும். எங்

திரு. கோ. க. அ. ரங்கராஜன்,<br>திருப்பதி.

களுடைய உகப்புக்காகவல்லாமல் உன்னுடைய உகப்புக்காகவே உனக்குக் கைங்கர்யங்களைச் செய்து உஜ்ஜீவிக்க (உய்ய) வேண்டும்' என்று பாரித்து முறையிடுகின்றாள.

இந்த ஜீவாத்மா ஸ்ரீவைகுண்ட நிகேதனன திருமாலுக்கே உரியது என்பதைத் திருமந்திர திருவாக்கால் உணரலாம்.

நமஸ் ஸு (என்னும் வடசொல்லில்) ந எனறும் ம: என்றும் இரணடு பதம் (எழுத்துக்கள்) உள்ளன; ம: என்கிறவித்தால் தனக்குரியன் என்கிறது; ந என்று அத்தைத் தவிர்ககிறது.

இவற்றுள் ஆறும் வேற்றுமையோடுங் கூடிய ம: என்னும் பதம் ''சேதனன் ஈசுவரனுக்கே உரியவன்'' என்ற உண்மைக்கு மாறாய்த் 'தனக்குத் தான் உரியவன்' என்னும் பொருளைக் கொடுக்கிறது. ஆனல் ந எனனும் பதமோ அதற்கு எதிரமறையாய் அதைத் தடுத்துத் 'தனக்குத்தான் உரியனல்லன்' என்பதைத் தெரிவிக்கின்றது. ஆகவே நம: என்னும் இத்தொடர்மொழி 'சேதனன தனக்குத்தான உரியனல்லன்' என்பதை நன்கு அறிவிப்பதோடு நில்லாமல் 'சேதனன திருமாலுக்கே உரியவன்'' என்னும் பொருளையும அறிவிக்கினறது.

''உன்றன்னைப் பிறவி பெறுந்தனை புண்ணியம் யாமுடையோம்'' என்று கூறி அடுத்த பாசுரத்தில் ''எற்றைக்கு மேழேழ் பிறவிக்கும் உன றன்னோ டுற்றோமே யாவோம உனக்கே நாமாட் செய்வோம'' என்கிருள் ஆணடாள் தமது திருப்பாவையில். 'இருள் தருமா ஞாலத் துளனிப் பிறவியான் வேணடேன்' என்று நம்மாழ்வாரும், 'பிறவாமை யெனைப் பணியெந்தை பிரானே' என்று திருமங்கையாழ்வாரும இங்ஙனே ஆழ்வார்களெல்லாரும் எம பெருமானைப் பிரார்த்திக்க ஆணடாளொருத்தி அங்ஙனம் வேணடாமல் (பிரார்த்தியாமல்) 'ஏழேழ் பிறவிககும்' என்ற சொல் நயத்தினல் எத்தனைப் பிறப்புகள் நேரிடினும் அதில் வெறுப்பில்லை என்றும், பிறக்கும் பிறவிகளதோறும் உன்னுடன் பிறந்து, உனக்கே தொண்டு செய்ய வேண்டுமென்றும தன் பாரிப்(விருப்)பினை வெளியிடுகிருள். 'ஏழேழ பிறவிக்கும்' என்பதன் நோக்கமாவது எம்பெருமான் அடிக்கடி அவதாரங்களைச் செய்தேயாக வேணடும்; அவ்வவதாரங்கள்தோறும பிராட்டியும் உடன் வநது பிறந்தேயாக வேணடும; இல்லையாகில் எம் பெருமானது அவதாரமே சுவையற்றதாக அமையும் என்பது.

இது பற்றி ஸ்ரீ பராசரபட்டர் என்னும் பரமாசாரியர் ஸ்ரீ ரங்க நாதனை நோக்கி ஸ்ரீ ரங்கராஜ ஸ்தவத்தின் உத்தர சதககதில்

अनुजनुरनुरूपरूप चेष्टा
न यदि समागममिन्दिराऽकरिष्यत् ।
असरस मथवाऽप्रियं भविष्णु
ध्रुवमरिष्यत रङ्गराज नर्म ॥

என்கிறா. இந்த சலோகத்தின கருத்தாவது, எம்பெருமானுடைய அவதாரங்கள்தோறும் பிராட்டியும ஒககப் பிறந்திலளாகில் அவ்வெம பெருமானுடைய செயல்கள் எல்லாம் சுவையற்றதாகவே இருக்குமென்கை. எனவேதான் ஆண

---

# நமது புராணங்கள்

நமது புராணங்கள் பதினெட்டு. அவைகளுடைய கிரந்தங்கள நான்கு லக்ஷத்து தொணணூற்று முவ்வாயிரத்துத தொள்ளாயிரம்.

| | | | |
|---|---|---|---|
| 1. பிரம்ம | புராணம் | — பதினாயிரம் | கிரந்தம் |
| 2. பரமாத்தும | ,, | — ஐம்பத்தொன்பதினாயிரம் | ,, |
| 3. ஸ்ரீ விஷ்ணு | ,, | — இருபத்து மூவாயிரம் | ,, |
| ·. சைவ | ,, | — இருபத்து நாலாயிரம் | ,, |
| 5. ஸ்ரீமகாபாவத | ,, | — பதினெணணாயிரம் | ,, |
| 6. நாரத | ,, | — இருபத்தையாயிரம் | ,, |
| 7. மார்க்கண்டேய | ,, | — பதினையாயிரத்து நானூறு | ,, |
| 8. பவிஷ்ய | ,, | — பதினாலாயிரத்தைந்நூறு | ,, |
| 9. ப்ரம்மவைவர்தத | ,, | — பதினெணணாயிரம் | ,, |
| 10. லிங்க | ,, | — பதினாயிரம் | ,, |
| 11. வராக | ,, | — இருபததிநாலாயிரம் | ,, |
| 12. ஆக்கினேய | ,, | — எணபததோராயிரம | ,, |
| 13. ஸ்காந்த | ,, | — லக்ஷம் | ,, |
| 14. வாமன | ,, | — பதினாயிரம் | ,, |
| 15. கூாம | ,, | — பதினேழாயிரம் | ,, |
| 16. மசசிய | ,, | — பதினாலாயிரம் | ,, |
| 17. கருட | ,, | — பத்தொன்பதினாயிரம் | ,, |
| 18. பிரமமாணட | ,, | — பன்னீராயிரம் | ,, |

நதிகளுக்குள்ளே கங்கையைப் போலவும், தேவர்களுக்குள்ளே அச்சுதன் போலவும், விஷ்ணு பக்தர்களுக்குள்ளே ருத்ரன் போலவும், சகல புராணங்களிலும் ஸ்ரீமகா பாகவதப் புராணமே உததமமாயுளளது. சகல வேதாந்த சாரமும ஸ்ரீ மகா பாகவதம புராணமென்று சொல்லப்படுகிறது.

திரு. சி. ஆர். திருவேங்கடத்தான், டால்மியாபுரம்.

டாள், 'எம்பெருமானே! நம்மிடையே பிறப்பு ஒருபோதும் ஓய மாட்டாது; ஆகையால் நாம் ஏழேழ் பிறவி பிறந்தேயாகவேண்டு'மென்று பிறந்து காட்டினுள். ஸீதாப் பிராட்டியாகவும் பூமிப் பிராட்டியாகவும் பிறந்த காலங்களில் பிரிவுத்துயரை அனுபவித்தது போல, சூடிக்கொடுத்த சுடர்க்கொடியாகப் பிறந்த இவ்வவதாரத்தன்னிலும் விநோதமான பிரிவுத்துயரை அனுவிக்க நேர்ந்தது நாம் செய்த பேறு என்றே கொள்ளலாம். பிரிவுத் தன்மை இல்லாதாயின் தேனும் பாலும் கன்னலும் அமுதமுமான இத்தகைய பாசுரங்கள் அவதரிக்கக் கூடிய நிலைமை இருந்திராது என்பது திண்ணம்.

தான் பாரித்தது நிறைவேறுது போகுமோ என்ற நிலைமைப் பிரிவுத் துயரத்தால் ஏற்பட்டது. அத் துயரைத் துடைப்பதற்குப் பலவழிகளிலும் அவளருளிய இரண்டாம் பிரபந்தமாகிய நாச்சியார் திருமொழியில் முயற்சி நடைபெறுகின்றது. இவ்வடிப்படையில் தோன்றியதே 'விண்ணீலமேலாப்பு' என்னும் திருவேங்கடப்பதிகம். திருவேங்கடவனை ஆங்காஙகுப் பாடுவதோடு நில்லாது திருப்பதிகமும் அருளினுளாயிற்று. 'திருவேங்கடவனுக்கு என் நிலைமையை எடுத்துக் கூறுங்கள்' என்று மேகங்களை அழைக்கிறுள் ஆண்டாள். மிகுந்த அறிவு பெற்ற ஆணடாள் அறிவிலியான மேகத்தை நோக்கி வாராததை சொல்வது பொருத்தமற்றதே என ஓர் வினு எழ இஙகு இடமுணடு. பரம பகதையான ஆணடாளள பரம பகதர்களான மஹாசாரியர்களை மேகஙகளாகப பாவிததுத தூது விடுகிறுள். பாரிப்பின் தன்மை அளவறறது என்பது நனகு விளங்கும் இபபதிகத்தால். மேகத்திற்கும் மஹான்களுக்கும் ஒற்றுமை நயஙகளைச் சில வற்றுல் எடுதததுக் கூறுவர் பெரியோர்.

1. மேகமானது உவர்க்கும் கடல் நீரை உட்கொண்டு இனிமையான நீரைப் பொழிவது போல ஆரியர்கள் மிகவும் கடினமான வேதப் பொருள்களையும் கிரஹித்து அனைவரும் அறியும்படியாகப் பொழிவார்கள்.

2. மேகமானது "உயிரளிப்பான் மாகங்களெல்லாம் மாகங்களெல்லாம் திரிந்து நன்னீர்கள் சுமந்து" என்கிற திருவிருத்தப் பாசுரப்படி, பெய்ய வேண்டிய இடமெங்கும் திரிந்து பெய்வது போல ஆரியர்களும்,

............எண்டிசை
பேர்த்தகர நான்குடையான் பேரோதிப் பேதைகாள்
தீர்த்தகர ராமின் திரிந்து" என்னும் பூதத்தாழ்வாரின் திருவாக்குப்படி க்ஷேத்ர, தீர்த்த யாத்திரை என்னும் காரணத்தாலே ஆங்காங்கு ஸஞ்சரித்து (திரிந்து) அர்த்த விசேஷங்களைப் பொழிந்து மகிழ்விப்பார்கள்.

3. மேகமானது பள்ளமான இடங்களையும் வெள்ளப் பெருக்கினுல் நிரப்புவது போல ஞானிகளும் நல்ல உபதேசங்களினுல் அறிவில் தாழ்ந்தவர்களையும் ஞானம் மிகுந்து நிறைவு பெற்றவர்களாக்கினுர்கள்.

4. மேகம் பெய்த நீர் ஆறு, ஏரி, குளம் முதலான நீர் நிலைகளில் தங்கி உலகுக்குப் பயனளிக்கின்றன. அவை பொழிந்த மற்றைய இடங்களில் தேங்கும் நீர் அசுத்தமாகிறது. அங்ஙனமே அதிகாரிகளான நல்ல பாத்திரங்களில் (அறிவுடை

## இறைவனுக்குச் செய்யப்படும் நைவேத்ய வஸ்துக்களும் அவற்றுக்கு வழஙகபபடும் வேறு பெயர்களும்

சாதம் — சால்யான்னம்
வடை — மாஷாபூபம்
அதிரஸம் — கோதுமாபூபம்
பதிர்பேணி — சர்க்கராபூபம்
லட்டு — லட்டுகம்
போளி — குளாபூபம்
கொழக்கட்டை — மோதகம்
சாத்துக்குடி — நாரங்கபலம்
மாதுளம்பழம் — பீஜாபூரபலம்
விளாம்பழம் — கபித்தபலம்
மாம்பழம் — ஆம்பரபலம்
வாழைப்பழம் — கதலீபலம்
திராட்சை — த்ராக்ஷாபலம்
கற்கண்டு — ரஸகணடம
தேங்காய் — நாளிகேரம்

## நவஸ்நானங்கள்

பஞ்சாம்ருத ஸ்நானம் — பஞ்சாம்ருத அபிஷேகம்
பால் ஸநானம் — பால அபிஷேகம்
ததி ஸ்நானம் — தயிர் அபிஷேகம்
கருத ஸ்நானம் — நெய் அபிஷேகம்
மது ஸ்நானம் — தேன அபிஷேகம
சர்க்கரை ஸ்நானம் — சர்ககரை அபிஷேகம்
சந்தன ஸ்நானம் — சந்தன அபிஷேகம்
மங்களோதக ஸ்நானம் — மஞ்சள் குங்குமம்கலந்த-
சுத்தோதக ஸ்நானம் — மஹாபிஷேகம [அபிஷேகம்

தொகுபபு: திரு வி. ஸ்ரீகாந்த், கோயமுத்தூர்.

யோர்) ஆசிரியர்கள் தேக்கும் அர்த்தப் பெருமைகள் நல்ல பரம்பரையில் வாழ உரியவையாகின்றன; அவையே அதிகாரிகளல்லாதவரிடம் தங்கிப் பயனேதும் இல்லாது போகின்றன.

இன்னும் பல ஒற்றுமை நயங்களை எடுத்துக் கூறலாம். விரிவுக் கஞ்சி நிற்கிறேன்.

தன் பாரிப்பாலும், செயலாலும் செய்கையாலும் ஆழ்வார்களை விஞ்சிய தன்மையை, மணவாள மாமுனிகள் உபதேச ரத்தினமாலையில் அழகுற எடுத்தியம்புகிறார்.

அஞ்சுகுடிக் கொரு சந்ததியாய் ஆழ்வார்கள்
தஞ்செயலை விஞ்சி நிற்கும் தன்மையளாய்—பிஞ்சாய்ப்
பழுத்தாளை ஆண்டாளைப் பக்தியுடன நாளும்
வழுத்தாய் மனமே மகிழ்ந்து.

ஆழ்வார்களை விஞ்சும் தன்மை யாவது, மங்களாசாஸனத்தில் தன்னுடைய தந்தையாரான பெரியாழ்வாரையொத்து, ஞானபக்தி முதலியவற்றால் ஆழ்வார்கள் பதின்மரையும் மீறியுள்ளாள் என்பது. இவள் பிறப்பே பெண்ணாகையால் பக்தி தானாகவே பெருகுதலாலும் பக்தியில் ஆழ்வார்களைப் போல் பெண்ணுரு தரிசிக்க வேண்டாமையாலும் அவர்களை விஞ்சிய பெருமை இவளுக்குண்டு. மேலும் ஆழ்வார்களைப் போலே நோன்பு நோற்கை, மடலூர்கை முதலான செயல்களை மேற்கொள்ளுதல் மட்டுமின்றி, மன்மதனைக் குறித்துப் 'பேசுவதொன்றுண்டிங் கெம் பெருமான் பெண்மையைத் தலையுடைத் தாக்கும் வண்ணம்' என்றும் 'உன்னையும் உம்பியையும் தொழுதேன்' என்றும் 'தொழுது முப்போது முன்னடி வணங்கி' என்றும் அவனைப் பரதேவதையாக எண்ணி அவன் காலில் விழுநது வேண்டுதலும் ஆழ்வார்களைக் காட்டிலும் இவளுக்குள்ள ஏற்றமாகும். பாரிப்பு என்ற சொல் திருவேங்கடமலைக்கே உரித்தாகும் எனத் தெரிகிறது. பாரிப்பு என்பது சொல் வழக்கில் மனக்கோட்டை என்பர். ஆனால் அம்மனக்கோட்டை நிறைவேறுதல் என்பது எம்பெருமான் செயலாலேயே தலைக்கட்டுவிப்பதாக இருக்க வேண்டும் என்பதைக் கோதைவாய் அறியலாம். இல்லையேல் மணலினால் ஆக்குவித்த வீடு போல் இடிந்து விழக்கடவதே.

அவ்வாறில்லாமல் ஆண்டாள் தன் அவதாரத்தைப் பாரிப்போடு பெற்று இறுதியில் தன் பாரிப்புக்கு எவ்விதக் குறையுமின்றி, குறைவொன்றுமில்லாத கோவிந்தனின் திருவடிவாரத்தில் தலைக் கட்டுகிறாள்.

ஆண்டாள் திருவடிகளே சரணம்.



## தி. தி. தேவஸ்தான
## ஸ்ரீ கபிலேஸ்வரசுவாமி கோயில், திருப்பதி.

### தினசரி நிகழ்ச்சி நிரல்

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | சுப்ரபாதம் |
| 5-30 | முதல் | 9-30 | வரை | ஸர்வ தரிசனம் |
| 9-30 | ,, | 10-30 | ,, | அபிஷேகம் (ஆர்ஜிதம்) |
| 10-30 | ,, | 10-45 | ,, | முதல் மணி |
| 10-45 | ,, | 11-30 | ,, | ஸர்வ தரிசனம் |
| 11-30 | ,, | 11-45 | ,, | இரண்டாவது மணி |
| 11-45 | ,, | 4-00 | (மாலை) | ஸர்வ தரிசனம் |
| 4-00 | முதல் | 4-30 | வரை | அபிஷேகம் (ஆர்ஜிதம்) |
| 4-30 | ,, | 5-30 | ,, | ஸகஸ்ரநாம அர்ச்சனை (ஆர்ஜிதம்) |
| 5-30 | ,, | 5-45 | ,, | இரவு மணி |
| 5-45 | ,, | 8-00 | ,, | ஸர்வ தரிசனம் |
| 6-15 | ,, | 6-45 | ,, | தீபாராதனை |
| 8-00 | முதல் | 8-15 | வரை | ஏகாந்த சேவை |

| ஆர்ஜித சேவைகள் | கட்டணம் | நேரம் |
|---|---|---|
| 1. அபிஷேகம் | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | காலை 9-30 முதல் 10-00 வரை |
| 2. ஸகஸ்ரநாம அர்ச்சனை | ரூ. 1/- நபர் ஒருவர்க்கு | மாலை 5-00 முதல் 6-00 வரை |

### பிரஸாத கட்டண விவரங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1) | புளியோதரை | — | ரூ. 50-00 |
| 2) | பொங்கல் | — | ரூ. 55-00 |
| 3) | தத்யோதனம் | — | ரூ. 40-00 |
| 4) | சர்க்கரைப் பொங்கல் | | ரூ. 65-00 |
| 5) | தோசை | — | ரூ. 35-00 |
| 6) | ஸீரா | — | ரூ. 155-00 |
| 7) | கேஸரிபாத் | — | ரூ. 85-00 |

# திருவெம்பாவை

எண் சாண் உடம்பில் சிரசே பிரதானமாகவுள்ளது. தலையில் இரண்டு கண்கள் முக்கியமாக அமைந்துள்ளன. அது போலவே இந்து மதத்தில் வைணவம், சைவம என இரு சமயங்கள் உள்ளன. கண்ணில்லாதவன் குருடன. அதுபோலவே சமய உணர்வு இல்லாதவன் மிருகம் போன்றவனுவான். சைவ வைணவத்தில் பக்தியைப் பயிராக வளர்த்து ஆன்ம சித்திப் பெற்ற நாயன்மார்கள், ஆழ்வார்கள் பலர் உள்ளார்கள். சைவ வைணவ சமயத்தில் ஆண்டுகள் தோறும் மாதங்கள் தோறும் பல திருவிழாககள் நடைபெறுகின்றன. மார்கழித் திங்களில் இரு சமயத்தாரும் கொண்டாடும் திருவிழாக களான 'திருவெம்பாவை' 'திருப்பாவை' முக்கியமானதாகும். அதோடு சைவர்களுக்கு ஆருத்திரா தரிசனம சிதம்பரத்திலும், வைணவர்களுக்கு ஏகாதசி திருவரங்கத்திலும் நடைபெறும்

இந்த மார்கழித் திங்கள் மதி நிறைந்த நன்னுளில் பக்திச் செல்வங்களான மாணிககவாசகர், ஆண்டாள் இவர்களியற்றிய 'திருவெம்பாவை' 'திருப்பாவை'களை மனமுருகிப் பாடாதவர்கள யார் உளர்? இவர்கள் பற்றிய கவித்தேனை சுவைக்காதவர் சிலரே.

மார்கழித் திங்களில் குளிர், பனி அதிகமாக இருக்கும். ஆனுலும் பக்திப பெருக்கால் பக்தர்கள் அதிகாலை நீராடி திருவெம்பாவை, திருப்பாவைகளை இசையோடு பாடி மகிழ்வார்கள. கன்னிப் பெண்களும 'மார்கழித் திங்கள் மதிநிறைநத நன்னுளில் நீராடப் போதுவீர'' எனப்பாடி ஒருவரையொருவர் எழுப்பிக கூட்டமாகச் சென்று நீராடி (பூரண நிலவொளியில்) இறைவன புகழ்பாடித தங்கள் பக்தி வெள்ளத்தை கடவுளுக்குக காணிக்கையாக்குவார்கள்.

இனித் திருவாசகத் தேனிலிருந்து இரணடொரு துளிகளைச சுவைப்போம்.

வாதவூரில் பிறந்த மாணிக்கவாசக சுவாமிகள் பாடிய 'திருவாசகம' எனும் அமுதக கடலில் 'திருவெம்பாவை'யெனும் அலை வீசுகிறது. தித்திக்கும் தேனுய் இனிக்கும் திருவாசகத்தை — எத்திக்கும் சிவனடியார்கள் போற்றிப் புகழ்ந்து இறைவன் துதிபாடி இறைவனடி சேர விரும்புவார்கள

மாணிக்கவாசகர் பாடிய கவிதைகள் சொல்லும், பொருளும் இசை மூலம் தோன்றும் இன்பத்தை அனுபவித்தவாகளுக்கே தெரியும. அக்கவிதைகளில் வரும் அழகுகள் பலதிறப்பட்டன. அவைகளில் கதிரவன் எழும்முன் தெரியும் இயற்கை நிறைந்த காலமொன்றுகும். உழவர்கள் ஏர்ப்படையோடு செந்நிலங்களை உழச் செல்வதும், கோவலர் பசுங்கன்றுகளைக கொட்டிலிலே கட்டிவிட்டுப் பசுக கூட்டஙகளை மலைச் சாரலில் பசும்புல் மேயச செய்து — தாம மரநிழலில் சாய்நதிருந்து காப்பதும், ஆய்ச்சியர் தயிர, மோர் விறகச செல்வதும், வேட்டுவர், குறத்தியா, பரதவர் முதலானேரகளுடைய செயல்களை ஆழ்நதக் கருத்தில பொதித்து கவிதைகளை வெளிப்படுத்தி, மககளை நுகரச்செயத பானமை இனபுறுவதற்குரியது, போறறுவதற்குரியது.

இததகைய உதய காலமே திருவெமபாவைக் கவிதைத் தோன்றக் காரணமாகும். 'திருவாசகத்திற்கு உருகார், ஒருவாசகத்திற்கும் உருகார்' என்பது போல் கவிதை தோறும எனபுருகும் கருத்துக்கள் மலிந்து கிடப்பதைக் காணலாம்.

''திருவாசகமிங கொருகா லோதின்
கருங்கல் மனமுங் கரைந்துருகும''

என சிவப்பிரகாசரும் புகழுரை கூறியுள்ளாா. இததிருவாசகததில் ஒரு பகுதியே 'திருவெம்பாவை'யாகும். தமிழகமெங்கும் மார்கழித் திங்களில் சங்கு சேமக் கலமாகிய — கருவிகளை இசைத்துக் கொண்டு இருப்பதைக் கேட்டு மகிழாதார் யார் உளர்.

இத்திருப்பாவை திருவண்ணுமலையில் அருளிச் செய்யப்பட்டது. இருபது பாக்களைக்கொண்டது. மாணிக்க வாசகர் காலத்தில் பெண்கள் ''பாவை நோன்பு'' எனற நோன்பினை நடத்திஞர்கள். பாவையர்கள் வைகறையில் துயில் விட்டெழுந்து சிவதோத்திரமோதிக் கொண்டு, அணடைவீட்டு மாதர்களையும எழுப்பி நீராடப் போவதைக் கணடே திருவெம்பாவை கவிதைகள் பிறந்தனவென்பர். இந்த இருபது கவிதைகளும் இருபது விலையில்லா மாணிக்கங்களாகும்.

''முத்தனை வெண்ணகையாய்
முன்வந்து எதிரெழுந்தென்
அததன் ஆனந்தன்
அமுதன் என ளள்ளூறித்
தித்திக்கப் பேசுவாய்
வந்துன கடைதிறவாய்
புத்துடையீ ரீசன
பழவடியீா பாங்குடையீர்
புத்தடியோம் புனமை தீர்த்து
ஆட்கொணடால பொலலாதோ
எத்தோ நின அன்புடமை
எலலோம அறியோமோ
சித்தம அழகியாா
பாடாரோ நம சிவனை
இத்தனையும் வேண்டும
எமக கேலோ ரெமபாவாய்''

என்ற கவிதையைப் படிப்பின் செவிக்கினிய தீங்கனியாய் தித்திக்குமென்பதை அறியலாம. ''பழவடியீர்!

திரு. ஆர். அத்தியப்பன், பாச்சல்.

புதிய அடியேனுடைய புன்மைதீர்த்து ஆட்கொண்டால் பொல்லாதோ'' என ஒருவாறு நிந்தையாய்க் கூறும் பெண்ணின் கபடமில்லா உள்ளமும் இள முறுவலும் சிந்தனைக்குரியது.

''ஒள் நித்தில நகையாய் இன்னம் புலர்ந்து இன்றோ'' எனக் கடைசியில நின்று கேட்கும் பெண்மணிக்கு ''வண்ணக் கிளிமொழியாா எல்லோரும் வந்தாரோ''? என்ற வினா விடையாய் வர, 'எண்ணிக் கொண்டு உள்ள வாறு சொல்லுவோம். அவ்வளவும் கண்ணைத் துயின்று அவமே காலத்தைப் போக்காதே நீயே வந்து எண்ணிக் குறையில் துயில' என முதல் கூறிய பெண்மணி சொல்லி நகைகிருள. அன்பும், நகைப்பும் ஒருஙகே சேரக்கூறும் மகளிரின் உளளங்கள் கள்ளங் கபடமற்றதாய் விளஙகுவதைக் காண்க!

'' விண்ணுக்கொரு மருந்தை வேத
விழுப பொருளைக் கண்ணுக்கினியானை''

சித்தம் மகிழ பாவையர் பாடி மனங் களித்து பேரின்ப பரிசைப் பெறுவதையறியலாம்.

'' கோழி சிலமபச் சிலம்புங் குருகெங்கும்
எழிலியமப இயமபும வெண
சங்கெஙகு

என்ற தொடரினல் கோழிகள் கூவுகின்றன, புள்ளினம் எங்கனும் இசை பாடுகின்றன, வெளளிய சங்கம் முழங்குகின்றன, எனும் பொருள் தோன்றி, வைகறையின் இயற்கை அழகைக காட்டுகின்றன. இவை உள்ளத்திற்கு அளிகக்கும் இயற்கை இன்பமல்லவா?

'' முன்னைப் பழம பொருட்டு முனனைப
பழம பொருளே!
பின்னை புதுமைக்கும போததுமப
பெறறியனே''

என்பதால் இறைவன காலவரையற்ற—தொன்மைக்கும தொன்மையாம் நிற்பவன்; பின் புதுமைக்குப் புதுமையாய் நிற்பவன் என்றும்; பொருள் படுவதறிக.

'' பாதாள மேழினுங கீழ் சொற கழிவு
பாத மலா'' எனும தொடககப் பாவால் இறைவனின் உணமை நிலை வெளிப்படுவதையறியலாம்.

'' காதார் குழையாட பைமபூண
கல ஙடக்
கோதைக் குழலாட வண்டின்
குழாமாடச
சீதபபுனலாடிச் சிறறம்றலமபாடி''

' பொனனஞ் சிலம்பிற சிலமபி
திருப்புருவம'
'' கண்ணா ரிரவி கதிர்வந்து கா கரபபத்
தண்ணா ரொளி மழுங்கித் தாரகைகள்
தாமகலப ''

ஆகிய சொற்றொடாகள் மலரினும மென்மை பூணடு பொலிவனவனறி சிததிரம் போல் கண்ணுக்கினிய காட்சித் தருகினறன.

இவ்வண்ணம இறைவனின் பெருமைகளைப் பாடும் மகளிர் தமது இசையில் ஒப்பற்ற பெருங்கருணை விழுப்பொருளை அடையாது விடுவார்களா? அதிகாலையில் இவைகளைக காணபதும், கேட்பதும் மக்களுக்கு இன்பமளிப்பதோடு மகளிரின இன்னிசையையும் கேட்கின்ற அவர்கள் அடையும் இன்பத்திற்கு எல்லையுணடா?

'' விருபபோடு வெண் சஙகம ஊதா ஊரும ஊரால அடவி காடே'' எனற நாயனர் திருவாக்குப்படி சஙகநாதமின்றி காடாகாமல், புள்ளினம் ஆர்ப்ப, சங்கம் முழங்க புதுப்புனலாடி இறைவன் பால் உள்ளத்தைச் செலுத்தி வழிபாடு செய்தல் வேண்டும் என்பவே ஆன்றோர் வாக்கு.

எனவே திருவெம்பாவை, திருப்பாவை கவிதைகளை செவிவழிக் கேட்டு மார்கழித் திங்களில் மககளனைவரும் வைகறைத துயில எழுநது நீராடி இறைவனை வழிபடக் கடவர்.

பெணமணிகள் இக் கவிதைகளைப் பாடிக் கொணடே மாாகழி நீராடி இல்லங்களை மெழுகிட்டு, கோலமிட்டு இறைவனுடைய திருவருட சொருபமாகிய சக்தியை வழிபட வேணடும

சைவர் வைணவர் இருபாலருககுமே சிறந்த மார்கழித் திஙகளில ஐம்புலனும் கூடி ஒருங்கே நுகர வல்ல – இனபத்தையடைதல் வேண்டும். மேலான ஆன்றோர் மணிவாசகப் பெருமான் அருளிய ''திருவெம்பாவை''க் கவிதைகளை ஓதி நற்கதி அடைவோமாக! ○

# தாந்தோன்றி மலை

திருச்சிமாவட்டம் கரூர் அருகே தாந்தோன்றி மலையில அருள்மிகு கல்யாண வெங்கடரமணசுவாமி எழுந்தருளி இருககிறார். மற்ற தலங்களைப்போல் இத்தலத்தில் ஸ்வாமியின் சிலை பிரதிஷ்டை செய்யப்படவிலலை. தானகத்தோன்றிய இநத மலையில் பெருமாள் மலையோடு சேர்ந்தே தோன்றி இருப்பது தனிச்சிறப்பாகும. பெருமாளின் வலது கரததில் சுதர்ஸன சக்கரமும், இடது கரத்தில் சங்கும், திருசசிரசில் மணிமகுடமும் ஒளிர்விட நின்ற கோலத்தில் காட்சித தருகிறார் இஙஙுப பெருமாளை தரிசனம செய்யும் பொழுது பக்திப் பரவசததால நம மெயச சிலிர்க்கிறது. பிறவி எடுத்த நாளனைத்தும் பார்த்துக்கொண்டே இருப்போம் எனற பேரானந்தமும் நமககு ஏற்படுகிறது இத்தலத்தில் ஒவ்வொரு வருடமும் புரட்டாசி மாதம பிரும்மோத்ஸவம் நடைபெறுகிறது. புரட்டாசி திருவோணத்தன்று திருததேர் உற்சவம வெகு விமரிசையாகக கொண்டாடப்படுகிறது. திருவிழா நாட்களில தமிழகத்தின் பலபகுதிகளிலிருந்தும் மக்கள் வெள்ளமாய் வருவதிலிருந்து இத்தலத்தின் மகிமை தெள்ளெனப் புலப்படுகிறது.

வி. ஸ்ரீகாந்த்-கோவை.

# திருவேங்கடமலை வரலாற்று மாலை

(ஸ்ரீமத் அனந்தார்யர் அருளிய ஸ்ரீ வேங்கடாசல-இதிஹாஸ மாலாவின் தமிழ் மொழிபெயர்ப்பு)

திரு. தி. அ. கிருஷ்ணமாசாரியர்,
சிரோமணி—வித்வான, திருப்பதி.

## அனந்தாழ்வான அறியாமல் செய்த அபசாரம்

அனநதாழ்வான தமது பூரண கர்ப்பிணியான மனைவியும் மகனும தாமுமாய மிகக ஆதரததோடு ஸ்ரீராமானுஜனெனனும் ஏரியை வெட்டும் போது அம்மனைவி மண பாரத்தைச சுமவா நிற்க, பரம காருணிகனை பகவான் பூர்ண காப பிணியாய் மண சுமக்கும் அவளைக் கண்டு பொறுதவனய் ஓர பிரமசாரி யுருவநதாங்கி அணுகி 'வந்து தானே அம் மண்பாரததைச் சுமக்கத் தொடங்க, தமது கைஙகரியததில பிறர் தலையிடுதலைத் தாங்காத அனந் தாழவான அதைத தடுத்தும் அவரது மனைவியின் திறத்தில் அதிகமான கருணை கொணட பகவான் நடுவழியில் அடிக்கடி வந்து அவள் கையிலிருந்து வற்புறுததி வாங்கி மண கூடையைச் சுமந்து கொண்டிருந் தான்.

இச்செய்தியை அறிந்த அனந்தாழ் வான பிரமசாரியுருவங்கொணட பக வானைப்பின்தொடர்ந்து ஓடிபபெரிய கடப்பாரையை அவன மோவாயில் எறிந்தார் கனமான கடப்பாரை யினல அடிபட்ட பெருமான் மோவா யிலிருநது ரத்ததாரை பெருக ஓடிச் சென்று தனது ஆனநத நிலய விமா னத்தில் புகுநதான.

பின்பு அனந்தாழ்வான கோவி லுக்குள்ளேசென்று பகவான் மோவா யில் குருதி பெருகுவதைக் கணடு தாம மிகவும் அபசாரப பட்டதாக நினைத்து அதற்காக பகவானிடம் பொறுக்குமாறு வேணடிச சேவித்து, மோவாயப் புண்ணில் ரத்தப் பெருக் கைத் தணிப்பதற்காகப் பூவிலுள்ள மகரந்தப் பொடியை வைத்து அழுத் தினர்.

பிறகு ஸ்ரீநிவாஸ பகவான் கைங் கரியத்தில் அனந்தாழ்வானுக்கு உள்ள அதிகமான ஊற்றத்தை அறிந்து மகிழ்ந்து அவரை நல்வார்த் தைகளால் தேற்றி, அப்புண்பட்ட அடையாளத்தைத் தன் திருமார்பி லுள்ள திருமறுவைப்போல் உயர்ந்த லக்ஷணமாக எண்ணி, அனந்தாழ் வானுடைய மகிமையை அனைவர்க் கும வெளிபபடுத்துவதற்காக மோவாயில புணபட்ட இடத்தில் நறுமணமுள்ள பச்சைக் கருப்பூரப் பொடியை எப்போதும் தரிததும், அவருடைய கடப்பாரையை அனை வரும் காணத்தக்கஇடததில்(கோபுர வாயிலில்) நிறுத்தியும் அவருக்குத் தனது பீதாம்பரம் ஆபரணம் மலர் மாலை முதலியவற்றை அளித்து கௌரவித்தருளினன்.

## அனந்தாழ்வான் வேங்கடவனுக்கு மாமனாராகியது

ஒருசமயம், அனந்தாழ்வான் அமைதத தோட்டத்தில், வெகு நாட் களாகத் தம் விருப்பப்படி உலாவித் திரியும் அரச தமபதி வேஷமணிந்த ஸ்ரீபத்மாவதியையும் ஸ்ரீநிவாஸ பக வானையும அனந்தாழ்வான் ஒரு இர வில் புதரில் மறைநதிருநது பிடித்து ஓர் கொடி கொணடு மரத்தில் கட்டு வதற்காக இழுகக, ஸ்ரீநிவாஸன் அவ ரது கையை விடுவித்துக் கொண்டு ஓட்டம பிடிக்க, ஓட முடியாமல் 'அப்பா அப்பா உமக்கு நான் பெண் ணாக இருப்பேன. தவறு ஏதும்செய் யாத பெண பிளளையாகிய என்னை விட்டுவிடும்' என்று பிறர் இரங்கும் வகையில் பேசுகின்ற பத்மாவதியை ஓர் செண்பக மரத்தில் கொடியால் கட்டி அச்சமுறுத்தி அவள் கதையை வினவிக் கொண்டு பக்கத்திலேயே (இரவு முழுதும் காவலாக) இருந் தார். இது இங்ஙனமாக, காலையில் கோவிலுக்கு வந்த அர்ச்சக பரிசார கர்கள் பெருமாள் திருமார்பில் கண் டிகையில் இருக்கும் பத்மாவதியைக் காணுமல், உடனே பகவான் ஒருவனை ஆவேசித்துச் செய்தியை அறிவிக்க அவனது ஆணையின்படி பத்மாவதி யையும அனந்தாழ்வானையும் அழைத் துச்செல்வதற்காகத் தோட்டத்திற்கு வர, அவாகள் மூலமாகச் செய்தியை அறிந்த அனநதாழ்வான் 'இது மஹாபசாரம' (பெருங்குற்றம்)என்று நினைத்து, பத்மாவதி தேவியைச் செணபக மரததில் கட்டிய கட்டி லிருநது விடுவித்து, தாம் செய்த தவற்றினைப் பொறுக்குமாறு அவனை வேண்டி, தமது காலைக் கடன்களை நிறைவேற்றியவராய், தான் முன்பு கூறிய வார்த்தையை மெய்ப்பிக்க

விரும்பி மணம் செய்து கொள்ளத் தக்க கன்னிகையின் நிலையை அடைந்து தமக்குப் பெண்ணுக ஆகிய பத்மாவதியைப் பூக்குடலையுடன் கக்ஷத்தில் எடுத்துச் சென்று ஸ்ரீவாஸ பகவானை அணுகி நின்று வணங்கித் தாம் செய்த தவறுக்காகப் பொறை வேண்டினர். பின்பு பகவான ஒரு மாலையைத் தன் கழுத்திலிருந்து கழற்றி அவர் கழுத்தில் சாத்திக் கௌரவித்து, 'அனந்தாழ்வானே உம்முடைய இக்கன்னிகையை எனக்குத் தாரும்' என்று வேண்ட, அனந்தாழ்வான் ஸ்ரீநிவாஸனுக்குப் பத்மாவதி தேவியை ஸமர்ப்பிக்க, அப்பிராட்டி அர்ச்சக பரிசாரகர் அனைவரும் பார்த்துக் கொண்டிருக்கையில் திடீரென்று கிளம்பி முன் போலவே பெருமான் திருமார்பில் கண்டியிலுள்ள பொன்மயமான பத்மாவதியுருவமுடையவளாக மாறி நிற்க அதனை எல்லோருடனும் ஆச்சரியத்தோடு கண்ட அனந்தாழ்வான் அதுமுதற்கொண்டு அலர்மேல்மங்கையின் தந்தையென்றும் திருவேங்கடமுடையானுக்கு மாமனென்றும் எங்கும் அனைவராலும் அழைக்கப்படலானுர்.

## அவர் தம் மகளுக்கு 'என் திருமகள்' என்று பெயரிட்டது

அனந்தாழ்வான் திருவேங்கடமுடையானைச் சேவிக்குங்காலங்களில் "தென்திருவரங்கத்தைக் கோயிலாகக் கொண்ட பெருமானே, என் பெண் - என திருமகள்சேர் மார்பனே என்கிறுள். என்னுடைய ஆவியான வனே எனகிறுள. நின் திருவெயிற்றுல் (கோரப் பற்களால) அண்டபித்தியிலிருந்து (அண்டத்தின் கீழ்ச் சுவரிலிருந்து) நீ பெயர்த்தெடுத்த பூமி தேவியின் மணவாளனே என்கிறுள். முன்பு ஒரு கால் இடிபோல் பயங்கரமாக முழங்குகின்ற பெரிய எருதுகள் ஏழினை வென்று நீ ஏற்றுக் கொண்ட நப்பின்னைப் பிராட்டிக்கு அன்பனே என்கிறுள். —(இங்ஙனம் உம்மையே நினைத்து வருந்துகின்ற) இவளுடைய வருத்தத்திற்கு நான் ஒரு முடிவு அறிகிலேன்" என்னும் கருத்தைக் கொண்ட திருவாய்மொழி ஏழாம் பத்து இரண்டாந் திருவாய்மொழி ஒன்பதாம்பாசுரத்தை, 'ஏகா கந்யா' முதலிய ப்ரமாணங்களில் கந்யா என் பதனுல் குறிக்கப் பெற்ற (தமது) மனஸ்ஸைத் (தமது) கந்நிகையாகவும் தம்மைத் தாயாகவும் திருவேங்கடமுடையானைத் திருவரங்கப் பெருமாளாகவும் பாவனை செய்து, 'என் திருமகள' என்ற சொல்லுக்குப் பொருளாகத் தமக்கு இபபோது பெண்ணுக ஆன பத்மாவதியையும் நினைத்துத் திருவேங்கடமுடையானைப்பற்றியதாக அநுஸந்தானம் செய்து கொண்டு வநதவர், பின்பு தமக்குப் பிறந்த பெண்ணொருத்திக்கு 'என் திருமகள' என்ற பெயரைச் சூட்டினர்.

## அனந்தாழ்வானை அரவு தீண்டியது

ஒரு போது அனந்தாழ்வான் ஸ்ரீராமாநுஜனென்னும் தமது தோட்டத்தில் திருத்துழாய் மலர்களைப் பறித்துக கொண்டிருக்கையில் ஒரு பாம்பு தமது கையில் கடிக்க, எம்பெருமானர் திருவடிகளே சரணம் என்று சொல்லி அக்கையை பூவால் துடைத்து விட்டு ஸ்வாமி புஷ்கரிணியில் நீராடி, விஷத்தைப் போக்க முயன்ற தமது சிஷ்யர்களை விலக்கிக் கோவிலுக்குச் சென்று பெருமாளைச் சேவித்திருந்தார். 'விஷந் தீர்க்கும் முயற்சியிலிருந்து மீண்டது ஏன' என்று பெருமாள் கேட்டதற்கு, ஆதிசேஷனது அம்சமாகத் தம்மை நினைத்த அனந்தாழ்வான் 'கடித்த பாம்பு வலிதாகில் விரஜையில் நீரா

33ம் பக்கம் பார்க்க

## அரசை குறிப்பிட்ட கிழமைகளில் வலம் வருவதால் ஏற்படும் நன்மைகள்

| கிழமை | வலம வருமபொழுது நினைக்க வேண்டிய தெய்வம | நனமை (பலன்) |
|---|---|---|
| ஞாயிறு | சூரியன் | நோய்கள் அகலும் |
| திங்கள் | பரமசிவன் | மங்களம் நிரம்பும் |
| செவ்வாய் | சக்தி | வெற்றி கிட்டும் |
| புதன் | நாராயணன | வியாபாரம் செழிக்கும |
| வியாழன் | தக்ஷிணுமூர்த்தி | கல்வி பெருகும் |
| வெள்ளி | லக்ஷ்மி | செல்வம் செழிக்கும் |
| சனி | நாராயணன் | குறைகள் நீங்கும் |

பொதுவாய் சனிக்கிழமையும, திஙகட்கிழமையும அரச மரத்தை வலம் வந்து வழிபட சிறநத கிழமைகளாகும்.

தகவல். கமலவேணி தனபதி.

# உருவ வழிபாட்டின் தத்துவங்கள்

## தோற்றுவாய் :

உருவம் இல்லாத கடவுளுக்குப் பெரியோர் உருவத்தைக் கற்பித்தார்கள். உலகத்திலுள்ள விலங்கினங்களில் எல்லாவற்றையும்விட மனிதன் மட்டுமே ஆறறிவு படைத்து அழகான உடலமைப்பையும் பெற்று வாழ்கிறான். "அரிது அரிது மானிடராய்ப் பிறத்தலரிது" என்ற ஒளவையார் பாடலின் கருத்தும் இங்கு நோக்கற்பாலது. கடவுளுக்கு உருவம் கற்பித்தபோது அவருக்கு மனித உருவத்தையே கற்பித்தார்கள். ஆனால் இறைவனோ உருவம் இல்லாதவர். கண்ணால் காண முடியாதவர் அவர் இயற்றும் ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய ஐஞ்செயல்களும் கண்ணால நாம் காண இயலாத செயல்களே யாகும். இறைவன் புரியும் இவ்வைஞ்செயல்களைத் தாண்டவம் என்றும், நடனம் என்றும் கூத்து என்றும் கூறுவர். யாரும் அறிய முடியாத இவ்வைஞ்செயல்களை அனைவரும் அறிந்து கொள்ளும் பொருட்டாக நூலறிவாளர் இறைவன் திருவுருவத்தைக் கற்பிக்க அதைக் கலை நூல் அறிந்த சிற்பிகள் அழகுள்ள பல சிறப்பு உருவங்களாக அமைத்துத் தந்தார்கள். பழங்காலத்தில் வாழ்ந்த

புலவர். மு. மணி எம்.ஏ.-வேலூர்

மக்கள் சூரியன், சந்திரன், மரம், மழை போன்ற இயற்கையை வழிபட்டனர். பின்னர் நாளடைவில் மனித வளர்ச்சியின் அறிவின் முதிர்வால் இறைவனுக்கு உருவம் அமைக்கப்பட்ட தென்பதை அறியலாம். இவ்வாறாகக் கற்பிக்கப்பட்ட இறைவனின் திருமேனியழகை இனிக் காணபோம.



## கிரேக்கச் சிற்பமும நமது சிற்பமும் :

கிரேக்கம போன்ற அயல்நாட்டுச் சிற்பங்கள் உருவங்களை உள்ளது உள்ளவாறே, கண்ணுக்குத் தோன்றுகிறபடியே அமைக்கப்படுவன. நமது நாட்டுத் தெய்வ சிற்பங்கள் உள்ளதை உள்ளபடியே காட்டும் நோக்கமில்லாமல் உருவங்களின் மூலமாக ஏதேனும் கருத்தை அல்லது உணர்ச்சியைக் காட்டும் நோக்கமுடையன. சிற்பக் கலையில் உன்னத வளர்ச்சி பெற்ற கிரேக்கர்கள் அமைத்த ஜூலியஸ், வீனஸ் முதலிய பற்பல கடவுளர்களின் சிறப்பு உருவங்களைக் காணும்போது மானிட உடல் அமைப்பின் சிரிய இயல்பு அவைகளில் அமையப் பெற்றிருப்பதைக் கண்டு அனைவரும் உண்மையிலேயே தமது கண்ணையும், கருத்தையும் கவரப் பெரு மகிழ்ச்சியடைகின்றனர். ஆனால நமது நாட்டுச் சிற்ப உருவங்களில் அமைக்கப்பட்ட தெய்வ உருவங்களோ காண்பவரின் கண்ணையும், கருத்தையும் மட்டும் சார்க்காமல் அதற்கப்பாலும் நம் மனத்தை இழுத்துச் சென்று பல உணர்ச்சிகளையும், கருத்துக்களையும் பெறச் செய்கின்றன. அயல்நாட்டுச் சிற்பங்களைப் போல சிற்பங்கள் வெறும் அழகிய காட்சிப் பொருளாக மட்டும் நம் நாட்டுச் சிற்பங்கள் விளங்காமல் மக்களுக்கு தெய்வீக உணர்ச்சியை ஊட்டுகின்றன வென்பதையும் அறியலாம்;

## திருமாலின் திருவுருவம் :

எட்டுத்தொகை நூல்களில் சிறந்த நூலாகக் கருதப்படும் நற்

றிணை என்னும் சங்க நூலில் பெருந்தேவனார் என்னும் புலவர் கடவுள் வாழ்த்துப் பாடலைப் பாடியுள்ளார். அப்பாடலில் ஆகாயத்தைத் திருமாலின் திருமேனியாகவும், சூரிய சந்திரர்களை அவருடைய கண்களாகவும், திசைகளைக் கைகளாகவும், கடல் நீரை ஆடையாகவும், நிலத்தைக் கால்களாகவும் கூறியுள்ளார்.

"மாநிலஞ் சேவடியாகத், தூநீர்
வளைநரல் பௌவம் உடுக்கையாக,
விசும்பு மெய்யாகத், திசை கையாகப்
பசுங்கதிர் மதியமொடு சுடர்கண்ணாக
இயன்ற வெல்லாம் பயின்றகத்
தடக்கிய
வேத முதல்வன் என்ப
தீதற விளங்கிய திகிரியோனே."

என்பது அந்தக் கடவுள் வாழ்த்துப் பாடலாகும். ஆகாயத்தைக் கடவுளின் உடம்பாகவும், திசைகளைக் கைகளாகவும் கற்பித்தபடியால் தான் நமது கடவுள்களின் உருவங்களில் நான்கு, எட்டு 'முதலிய பல கைகள் அமைக்கப்பட்டுள்ளன வென்பதை உய்த்துணர்ந்து அறிந்து கொள்ளுதல் வேண்டும்.



## நடராஜர் திருவுருவம் :

நடராஜரின் திருவுருவில் அவரது உடம்பும் ஆகாயத்தைப் போன்று பரந்தது என்பது பல அறிஞர்களின் கருத்தாகும். "ஆகாசமாம உடல்" என்று திருமூலரும், விசும்பே உடம்பு என்று சேரமான பெருமாள் நாயனாரும்,

"விண்ணவர் முதலா வேறோர் இடமாக்
கொண்டுறை விசும்பே கொல்நின்
ஆகம்"

என்று பட்டினத்து அடிகளும் பாடியிருப்பதால் இதை நாமறியலாம். கடவுளுக்கு ஆண் உருவம் கற்பிக்கப் பட்டது போலவே அவரது ஆற்றலாகிய சக்திககுப் பெண் உருவம் கற்பிக்கப்பட்டது. சிவபெருமானுக்கு நான்கு, எட்டு, பத்து, பதினாறு ஆகிய பல கைகள் கற்பிக்கப்படுவதும் உண்டு. ஆகாயத்தை உடம்பாகக் கொண்ட கடவுளுக்குத் திசைகள் கைகளாக உள்ளன. திசைகள் எட்டும் திருக்கைகள் என்பது திருமந்திரம். பத்துத் திசைகளும் பத்துக் கைகளாகும் என்பது காமிகாகமம்.

## திருவடிகள் :

கடவுள் இயற்றும் ஐஞ்செயல்களில் மறைத்தல், அருளல் ஆகிய இரண்டு செயல்களும் அவரது இரண்டு திருவடிகளாகக் கற்பிக்கப் படுகின்றன. மறைத்தல் என்னும் செயல் நடராஜரின் ஊன்றிய திருவடியாகும். இத்திருவடி உயிர்களுக்கு ஏற்படும் நல்வினை, தீவினைகளை அனுபவிக்கச் செய்து பின் அவ்வினைகளை ஒழிக்கிறது. தூக்கிய திருவ்டிக்குக் குஞ்சித பாதம் என்னும் பெயரும் உணடு. உலகில் வாழும் உயிர்களனைத்திற்கும் பேரின்ப வாழ்வையளிப்பது தூக்கிய திருவடியாகும்.

"ஈட்டிய வினைப்பயன் எவற்றையும்
மறைத்து நின்று
ஊட்டுவதாகும் நின் ஊன்றிய பதமே
அடுத்த இன்னுயிர்கட்கு அளவில்
பேரின்பம்
கொடுப்பது, முதல்வ நின்குஞ்சித
பதமே."

என்ற குமரகுருபர சுவாமிகளின் பாடலால் மேற்சொல்லப்பட்ட கருத்துக்களையறிகிறோம்.

## முக்கண் :

சிவபெருமானுக்கு மூன்று கண்கள கற்பிக்கப்படுகின்றன. மூன்றுவது கண் நெற்றியில் உள்ளது. சூரியன், சந்திரன், தீ ஆகிய மூன்றும் ஒளிகளைக் குறிப்பன மூனறு கண்கள் என்று தத்துவப் பொருள் கூறப்படுகிறது. "மோகாய முக்கண் மூன்றொளி" என்ற திருமூலரின வாக்கால் இக்கருத்தையறியலாம். இச்சா சக்தி, கிரியா சக்தி, ஞான சக்தி என்ற மூன்று சக்திகளையும் உடை

யவர் கடவுள் என்பதை அவருடைய மூன்று கண்களும் குறிப்பதாக காமிகாகமம் என்ற நூல் கூறுகிறது. உயிர்களுக்கு ஏற்படும் ஆகாமியம், சஞ்சிதம், பிராரப்தம் ஆகிய மூவகைத் துன்பங்களையும் தமது புன்முறுவலினால் கெடுத்தருளுகிறார் கடவுள் என்று இதன் தத்துவப் பொருள் கூறப்படுகிறது.

## சடைமுடி, நிலாப்பிறை :

சடைமுடியினைஞானத்திற்கு அடையாளமாகக் கூறுவர். எனவே கடவுள் ஞான வடிவானவன், பேரறிவையுடையவன் என்பதைச் சடைமுடி தெரிவிக்கின்றது. "நுண் சிகை ஞானமாம்" என்று திருமூலர் கூறுகிறார். சிவபெருமான் தனது சடைமுடியில் அணிந்துள்ள நிலாப்பிறை அவரது பேரறிவைக் குறிப்பதாகக் காமிகாகமம் என்ற நூலில் கூறப்பட்டுள்ளது.

## திருநீறு, முப்புரி நூல் :

சிவபெருமான் தனது உடம்பில் அணிந்துள்ள திருநீறு அவருடைய பராசக்தியைக் குறிக்கிறது எனலாம். "பராவணமாவது நீறு" என்று சம்பந்தர் பாடியதாலும் இக்கருத்தை அறியலாம். நீறு பாசத்தை ஒழிப்பது என்று வேறு பொருளும் கூறப்படுகிறது. "பாசமும் அங்கது கழியப் பண்ணும் திருவெண்ணீறும்" என்று கோயிற் புராணம் என்னும் நூலால் அறியலாம். மார்பில் அணிந்திருக்கிற பூணூல் குண்டலினி சக்தி என்பர். வேதாந்தத்தைக் குறிப்பது நூல் என்றும் சிலர் கூறுவர். நூலது வேதாந்தம் என்று திருமந்திரத்தில் கூறப்பட்டுள்ளது.

## சிலம்பும் கழலும் :

சிவபெருமான் தமது திருப்பாதங்களில் சிலம்பையும், வீரககழலையும் அணிந்திருப்பதாகக் கற்பிக்கப்படுகிறார். ஆன்மாவின் பழைய வினைகளையும், பிறவித் துன்பத்தையும் அறுத்து வீடு பேறளிப்பவர் தாம் ஒருவரே என்பதை இவை உணர்த்துவதாகக் கூறுவர். வேதத்தையே சிலம்பாக அணிந்து கொண்டதாகவும் சிலர் கூறுவர்.



திருவெண்காடு சிவஸ்தலம்.

## துடியும் தீச்சுடரும் .

சிவபெருமானின் வலக்கை யொன்றில் துடி (உடுக்கை) ஏந்தியுள்ளார். துடியதனில் என்று திருமூலர் கூறினார் தமது வேறொருகையில் ஏந்தியுள்ள தீச்சுடரானது ஐஞ்செயல்களில் ஒன்றான அழிக்கும் செயலைக் குறிக்கிறது. ஆன்மாக்களில் படிந்திருக்கிற பாசங்களை நீக்குகிற சங்கார வடிவமானது தீச்சுடர் என்னும் தத்துவப் பொருளைக் குறிக்கிறதெனலாம்.

## சூலமும் பாசமும் :

நடராஜரின் மற்றொரு கையிலுள்ள மூன்று பிரிவுகளையுடைய சூலம் ஆரணி, சென்னி, இரோதயித்திரி என்ற மூன்று சக்தி வடிவாகிய மூன்று பிரிவுகளையுடைய சூலப்படை அவர் முத்தொழிலுடையவர் என்பதையும் மும்மலங்களை நீக்குபவரென்பதையும் கூறுகிறது. "மூவிலை யொரு தாட் சூலம் ஏந்துதல் மூவரும் யானென மொழிந்த வாறே" என்ற ஒருபா ஒருபஃது பாடலால் பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகிய மூவரும்

தாமே என்பதை அறிகிறோமல்லவா. மற்றொரு கையிலுள்ள பாசககயிறு ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலங்களைக் குறிப்பதாக காமி காமம கூறுகிறது.

## கோடரியும் மணியும் :

கோடரி என்னும ஆயுதத்தைக கையிலேந்தியிருப்பதால இறைவன பேராற்றல் கொணடவர் எனபதைக குறிக்கிறது. இதை மழு எனறும கூறுவர் இது பராசகதியின் உருவ மாதலால் இறைவன பராசக்திககு மேலானவர் என்பதை உணர்த்து வதாக அறியலாம் ஓசையின உருவாகிய மணியை இறைவன ஏநதி யுள்ளார் எனறும் சிலர் கூறுவர்

## அபயகரம, வீசிய கை :

அபய முத்திரையைக காட்டும கையை அமைத்த கை என்பா. இக்கை காத்தல தொழிலைக குறிக் கிறது. "த °.. தனி வகுத்த சரா சரப் பகுதி அனைத்தையும் காப்பதுன் அமைத்த பொற்கரமே" என்று குமர குருபரரும பாடியுள்ளார். வீசிய கை உயிர்கள பேரின்ப நிலையை யடைகிற செயதியைக குறிப்பதாகக் கொள்வர். சில சிற்ப உருவங்களில வீசிய கை தலைக்கு மேலே தூககப் பட்டிருப்பதும் உண்டு.

## பாம்பும் திருவாசியும் :

சிவபெருமான உடமபிலும, அரை யிலும, கையிலும, பாமபையணிந துள்ளார் உலகம் தோனறவும, ஒடுஙகவும் தாமே நிமித்த காரணர் எனபதை யறிவிக்கவே இறைவன பாம்பை யணிநதுள்ளார் யென்பதை யறியலாம. பெருமானைச சுற்றித திருவாசி உள்ளது. இது ஓங்காரத் தைக குறிக்கிறது.

## முயலகன் :

தாண்டவப் பெருமானின் ஊன்றிய பாதத்தின் கீழே முயலகன் உருவம் காணலாம். முயலகனைக குறள என றும், கரு என்றும் கூறுவர். முயல கன் கரு நிறமும், விகார உருவமும் உடையவன். முயலகன் உருவம் பாசததுடன் (மலத்துடன்) இருக்கும் ஆன்மாவைக் குறிககிறது.

## முடிவுரை :

இதுகாறும் பழங்காலத்தில மக் கள் இயற்கையை தெய்வமாக வழி பட்டனர் என்பதையும, பின்னர் அறிஞர்கள் கடவுளரின் பல உருவங களைக கறபித்தனர் எனபதையும் யறிந்தோம். சைவ சமயத்தாரும், வைணவ சமயத்தாரும் சிவபெரு மானுககும், திருமாலுக்கும் உருவங் களைக கறபித்தனர். அத்திருவுரு வங்கள் காணபவருக்கு உணர்ச்சியை யும, கருத்துக்களையும் ஊட்டுகிறது எனற உணமையைய றிகிறோமல்லவா. உலகில் உள்ள பல சிற்பங்களைவிட நம் நாட்டுச் சிற்பங்களே எல்லா வகையிலும் சிறந்தவை, இணையற் றவையென்பது உளளங்கை நெல்லிக் கனி போல விளங்குகிறதன்றோ! ★



# அன்றே அப்பொழுதே வீடு!

உலகியல் வாழ்வில் உழன்றாலும் "பசுமையான பெரிய மலைபோன்ற மேனி, பவளம் போன்ற வாய், செந்தாமரைக் கண் ஆகிய உறுப்புக்களைக் கண்டும், அச்சுதனே, தேவர்கள்தம் தலைவனே, ஆயர்க கொழுந்தே என்றெல்லாம் எம்பெருமானை அன்புடன் விளிக்கும் சொற்களினால் உண்டாகும் இனியசுவை இப்புவியில் கிடைக்கப் பெற்றால் அமரர் உலகம் ஆளும் அப்பெரும் பதவி பெற்றாலும் தவிர்த்து விடலாம்" என்பது தொண்டரடிப் பொடியாழவாரின் கூற்று. புவியில் வாழ்வதின் பயனே பிறவியை அறுத்து முக்தியடைய வேண்டும் என்றும் பரம்பொருளுடன் இரண்டறக் கலந்து இன்புற்றிருப்பதே பிறவியெடுத்தன் பொருள் என்றும் சமய இலக்கியங்களும் இறையின்பத்தில் திளைத்த மேன்மக்களும் கூறியுள்ளனர். எனினும் ஆழ்வார் இச்சுவைதான் இனிமையுடையது என்றும், அச்சுவையைவிட இப்புவியில் பரமபொருளைக் கண்டு அனுபவிப்பதே சாலச் சிறந்ததாகும் என்றும பாடுகின்றார்.

திருமஙகையாழ்வார், திருமடல்களில் இறையின்பம் இப்பிறப்பிலேயே இங்கேயேயிருக்கையில் வீடு பேற்றுக்குத் தவமியற்றி, உடலை வருத்தி, நீரில் மூழ்கி, அனலில் காய்நது அல்லலுறுவோரைச் சாடுகின்றார். எம்பெருமானைப் பல்வேறு திருபபதிகளில் கணடு அனுபவிககும் எளிய பேற்றினைக் கைவிட்டுக கடுமையான வழிகளில் மோட்சமடைய முற்படுவது 'ஏரார் முயல்விட்டுக் காககைப்பின் போனவாறே' என்று எடுத்தியம்புகின்றார். மேலும் 'காய கனிகளை உணடும் உடலை வருத்தியும இலைகள் மேல் உறஙகியும பெறற பேற்றினை இயம்பவல்லவர் யாரே உளர்?' என்றும், 'சூரிய மண்டலத்தின் நடுவுள் வீடென்னும் தொன்னெறிக்கட் சென்றாரைச் சொல்லுமின்கள்' என்றும் திருமங்கையாழ்வார் வினவுகின்றார். முத்தியின்பத்தில் திளைககவிரும்பும் அடியவர்கள் பரம்பொருளின திருவருளைத தஙகள் உயிர் உடலைவிட்டுப் போகும முன்னதாகவே இப்புவி வாழ்விலேயே அனுபவிக்கப் பெற்றால் உலகியல் வாழ்வை வெறுதது ஒதுக்கி இறைகளோடு இசைந்த இன்ப வாழவில் திளைபபா என்பதும தெளிவாகிறது. பெரிய திருமொழியில் ஒரு பதிகம முழுவதும் 'ஆண்டாய்! உன்னைக் காணபதோர் அருள் எனக்கு அருளிதியேல் வேணடேன் மனைவாழக்கையை விண்ணகர் மேயவனே" என்கிறார் திருமங்கையாழ்வார். மேலும் ஒருவனுடைய வாழ்நாளில் பாதி உறககததிலும், மீதி பேதை, பாலகன், வாலிபன், பிணி, பசி, மூப்பு என்ற பல துன்பங்களுக்கு ஆட்படுவதால் பிறவி வேண்டாம் என்றனர்

நம்மாழ்வார் திருவாய்மொழியில,

"இங்கே திரிந்தேற கிழுக்குற்றெனை  
இருமா நிலமுன் உண்டுமிழந்த  
சொங்கோ லதத பவளவாய்ச் செந்தா  
மரைக்கண் என்னமமான்  
பொங்கேழ் புகழ்கள் வாயவாயப்  
புலன்கொள் வடிவென் மனத்ததாய்  
அங்கேய் மலர்கள கையவாய் வழிபட்  
டோட அருளியே?"

என்று மொழிகின்றார், அதாவது "முற்காலத்தில், மிகப்பெரிய இந்த உலகஙகளை எல்லாம் உண்டு உமிழநத, சிவநத அழகினையுடையதான பவளம் போன்ற திருவாயினையும், செந்தாமரை போன்ற திருக்கண்களையுமுடைய என் அம்மான், பொங்கி எழுகின்ற தன் கல்யாண குணங்கள் என் வாயிலே ஆகவும், இந்திரியங்களைக் கொள்ளை கொள்ளுகின்ற திருமேனி என் மனத்திலேயாகவும் அந்தத் திருமேனிக்குப் பொருந்திய மலர்கள் என் கையிலே யாகவும், ஸ்ரீ வைஷ்ணவர்கள் செய்யும் கைங்கரிய நெறியிலே நானும் சென்று நடக்கும்படி திருவருள் செய்தால், பரமபதம் செல்ல விருமபாமல் இந்த உலகத்திலே சஞ்சரிக்கின்ற எனக்கு வந்த குற்றம் யாது?" என்பதாகும்.

பரமபொருள் பர உலகத்திலும் இருப்பதைக் கண்டு ஆச்சரியப்படுகிறார் சுந்தரமூர்த்தி சுவாமிகள். "இசையில் இரண்டறக் கலந்து இருப்பவராய் அவ்விசையோடு பாடப்படும் பாட்டும் ஆகியுள்ளீர். பத்தர்கள மனதில் பரவியிருந்து அதனை உமதாக்கிக கொண்டீர். மனக்கண்ணில் உமமைத் தியானிப்பவர்கள் காணும் வண்ணம இப்புவியில் காட்சிக்கெளியராய் மதியினைச்சூடி எழுந்தருளியுள்ளீர் கடல் சூழ்ந்த திருவெண்காட்டில் எழுந்தருளியிருக்கும் பெருமானே, நீவிர் கயிலாயத்தவர் நெருங்கிவந்து உமமை வாழ்த்தி ஏத்தும் வண்ணம் பர உலகத்திலும் உள்ளவராயிருப்பது என்ன ஆச்சரியம்!" அதாவது, இவவுலகத்தவர் புறக்கண் முன் காணும்படிக் காட்சி தந்தருளும் அவவளவு எளிய இயல்பினராயிருநதும உணமையில் திருக கயிலாயத்து நிததியர்களது பெரு விருப்புக்கும புகலிடமாய நிற்கும்

டாக்டர். ஆர். கோபால கிருஷ்ணன்
எம்.ஏ.. பிஎச் டி,
சென்னை

# ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமி கோயில், திருமலை

## தினசரி பூஜைகள், ஸர்வதரிசனங்கள் பற்றிய கால அட்டவணை

**சனி, ஞாயிறு, திங்கள் மற்றும் செவ்வாய்க் கிழமைகளில்:**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 3-45 வரை : சுத்தி

3-45 முதல் 4-30 வரை : தோமால சேவை (அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்.

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல்மணி, பலி, சாத்துமுறை.

6-00 முதல் மதியம் 12-00 வரை : ஸர்வதரிசனம்

மதியம் : 12-00 முதல் 1-00 வரை : சுத்தி, 2வது அர்ச்சனை, (ஏகாந்தம்) 2வது மணி.

1-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்

1-00 முதல் 7-00 வரை: கல்யாணோற்சவங்கள், ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள், வாகனசேவைகள் ஊஞ்சல்சேவை முதலியன

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், இரவு மணி

8-00 முதல் 10-00 (இரவு) ஸர்வதரிசனம்

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாந்த சேவைக் கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்த சேவை (ரூ 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**புதன் கிழமைகளில் (ஸகஸ்ர கலசாபிஷேகம் நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

3-30 முதல் 3-45 வரை : சுத்தி முதலியன.

3-45 முதல் 4-30 வரை : தோமாலசேவை (அமந்த்ரணோறசவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

4-30 முதல் 4-45 வரை : கொலுவு, பஞ்சாங்க ஸ்ரவணம்

4-45 முதல் 5-30 வரை : முதல் அர்ச்சனை ஸகஸ்ரநாம அர்ச்சனை, (அமந்த்ரணோற்சவ கிருஹஸ்தர்கள் மற்றும் ரூ. 100/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமேஅனுமதிகக்ப்படுவர்)

5-30 முதல் 6-00 வரை : முதல் மணி, பலி, சாத்துமுறை மற்றும் ஸகஸ்ரகலசாபி ஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

6-00 முதல் 8-00 வரை : ஆர்ஜித ஸகஸ்ர கலசாபிஷேகம், சுத்தி, 2வது அர்ச்சனை 2வது மணி:

8-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்.

மதியம் : 1-00 முதல் மாலை 7-00 வரை: ஆர்ஜித கல்யாணோற்சவங்கள, ஆர்ஜிதபிரம்மோற்சவங்கள் வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் முதலியன

இரவு : 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு, கைங்கர்யங்கள், இரவு மணி முதலியன

8-00 முதல் இரவு 10-00 வரை ஸர்வதரிசனம்.

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்

10-30 இரவு ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**வியாழக் கிழமைகளில் (ஆர்ஜித திருபபாவாடை, நடைபெறுவதால்)**

காலை : 3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்).

3-30 முதல் 4-30 வரை : நிதய கட்டளை கைங் கர்யங்கள் அதாவது சுத்தி, தோமால, அர்ச்சனை முதல்மணி மற்றும் அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்.

4-30 முதல் 6-00 வரை : அபிஷேகம்

6-00 முதல் 7-30 வரை : மூலவருக்கு சமர்ப்பணை

7-30 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை 2-வது மணி, பலி,சாத்துமுறை முதலியன

9-00 முதல் இரவு 6-00 வரை : ஸர்வதரிசனம்

மதியம் 1-00 முதல் மாலை 7-00 வரை : ஆர்ஜித கல்யாணோற்சவம், பிரம்மோற்சவங்கள், வாகன சேவைகள், ஊஞ்சல் சேவைகள் மற்றும் மற்றைய ஆர்ஜித சேவைகள

இரவு7 -00 முதல் இரவு 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மற்றும் இரவு மணி

8-00 முதல் நடுஇரவு10-00 வரை : ஸர்வதரிசனம்

10-00 முதல் 10-30 வரை : சுத்தி, ஏகாந்தசேவைக் கான ஏற்பாடுகள்.

10-30 இரவு : ஏகாந்தசேவை (ரூ. 50/- டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)

**வெள்ளிக் கிழமைகளில (அபிஷேகம நடைபெறுவதால்)**

3-00 முதல் 3-30 வரை : சுப்ரபாதம் (ரூ. 25/- சிறப்பு நுழைவு தரிசன டிக்கெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

3-30 முதல் 5-00 வரை : சாலிம்பு, சுத்தி, கைங் கர்யங்கள், காலை மணி, அபிஷேகத்திற்கான ஏற்பாடுகள்

5-00 முதல் 6-30 வரை : அபிஷேகம்

6-30 முதல் 8-00 வரை : சமர்ப்பணை

8-00 முதல் 9-00 வரை : தோமால சேவை, அர்ச்சனை (தனி)

9-00 முதல் இரவு 7-00 வரை : ஸர்வதரிசனம்

இரவு 7-00 முதல் 8-00 வரை : சுத்தி, இரவு கைங்கர்யங்கள், மணி, முதலியன

8-00 முதல் இரவு 10-00 வரை ஸர்வதரிசனம்

10-00 முதல் 10-30 வரை : சுத்தி,

10-30 ஏகாந்தசேவை (ஆர்ஜிதம் ரூ. 50/- டிகடெட் வாங்கிய நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்.)

நிலைப்பித்கெட்டாப் பெருமையை சுந்தரர் விளக்குகின்றார்.

"அன்றேநம் கண்காணும ஆழியான்
கார் உருவம்
இன்றேதாம் காணு(து) இருபபதுவும்
—என்றேனும்
கட்கண்ணால் காணாத அவ்வுருவை
நெஞ்சென்னும்
உட்கண்ணால் காணும உணர்ந்து"

என்பது பெரிய திருவந்தாதி. அதாவது நமக்கு ஞானக்கண் இல்லாத காரணத்தால்தான் திருவாழியை உடைய எம்பெருமானது திருமேனியை அனுபவிக்க முடியவில்லை. புறக்கண்ணாலே காணவொண்ணாத அத்திருமேனியை நெஞ்சாகிற உட்கண்ணாலே நாம் காணமுடியும் என்கிறார் நம்மாழ்வார்.

உண்மையான தநதை தாய முதலிய எல்லா உறவினரும் சிவபெருமானே என்ற கருத்தில் மோட்சமடைய வழி காட்டுகின்றார் அப்பா பெருமான்:

"தந்தையார் தாயா ருடன் பிறந்தார்
தாரமார்
புத்திர ரார் தாந்தா மாரே
வந்தவாறு எங்ஙனனே போமா(று)
ஏதோ மாயமாம
இதற் கேதும் மகிழ வேண்டாம்
சிந்தைபீர் உமக்கு ஒனறு சொலலக்
கேண்மின்
திகழ் மதியும் வாளரவுந் திளைக்குஞ்
சென்னி
எந்தையார் திரு நாமம் நமச்சிவாய
என்றெழு வார்க்கு இருவிசுமபில்
இருக்கலாமே."

உலகில் உள்ள ஐம்பூதஙகள், அப்பன், அம்மை, மாமன், மாமி, ஒப்புடைய மாதர், பொருள், குலம், சுற்றம், ஊர், பொன், மணி, முத்து, நேற்று, இன்று, நாளை ஆகிய அனைத்துமே இறைவனது எங்கும் நீக்கமற நிறைந்துள்ள தன்மையை எடுத்துக் காட்டுகின்றன. இவ்வாறு உலகப்பொருட்களிலும், உயிருள்ளவற்றிலும் எம்பெருமானது திருக்கோலத்தைக் கண்டுவிட்டால் வேறு உலகும் அதன் சுவையும் தேவையில்லை என்பது தெளிவாகிறது. தில்லையம்பதியில் ஆனந்தக்கூற்று நடத்தும் நடராசப் பெருமானது அழகில் முழுமையாக ஈடுபட்டுவிட்டால் மீண்டும் மனிதப் பிறப்பையும் ஏற்றுக் கொள்ளலாம் என்பது அப்பர் வாக்கு.

பரம்பொருளை உயர்த்தித் தன்னைத் தாழ்த்தி, அப்படிப்பட்டத் தனக்கும் பரம்பொருள் மேலான இன்பத்தை இங்கேயே அளித்ததற்கு என்ன கைம்மாறு செய்ய முடியும் என்று மாணிக்கவாசகர் வினவுகின்றார்.

"யாவர்க்கு மேலாம் அளவிலாச்
சீருடையான்
யாவர்க்கும கீழாம் அடியேனை—
யாவரும்
பெற்(று)அறியா இன்பத்துள
வைத்தாய்க்(கு) என் எம்பெருமான்
மற(று)அறியேன செய்யும வகை"

"நான் விரும்புவதெல்லாம் உன்னுடைய பாதங்களையே; தினந்தோறும் துதிப்பதெல்லாம் உன்னுடைய கீர்த்தியையே; தலையில் அணிவதெல்லாம் அழகிய சக்கரத்தைத் தரித்தவனுடைய மேன்மையான திருப் பாதங்களையே". இவ்வாறு எபபோதும் இறைச் சிந்தனையில் ஆழ்ந்து விடுபவர்க்கு எது நோந்தாலும் அஞ்ச வேணடியதில்லை என்று பொய்கை ஆழ்வார் கருதுகின்றார்.

எம்பெருமானது திருமேனி நின்றாலும், இருந்தாலும், கிடந்தாலும் அவை திருத்தலங்களிலே எழுந்தருளியிருப்பினும் அடியவர்களது நெஞ்சில்தான் நீக்கமற நிறைந்து விளங்குவர் என்பதை திருச்சநத விருத்தத்தில் திருமழிசை ஆழ்வாரும், 'அரி வாமனன நிற்பது மேவி இருப்பது என் நெஞ்சகம்' எனறு நம்மாழ்வாரும் திருவாய் மலர்ந்தருளுகின்றனர். எப்பெருமான் எப்போது நம் நெஞ்சகத்துள் புகுந்திட்டு நமக்கு வீடளிப்பான்? "புற உலகப் பற்றற்ற தூய்மையாகிய நன்மையுடையவராய், அறியப்படும் புறப் பொருள்களைக் கடநது சென்று வலிமையுடைய இந்திரியங்களையெல்லாம் இழுத்து, ஆன்மாவோடு சேர்ந்து பிரித்தறிய முடியாதபடி ஒன்றாய்க் கிடந்ததான, கடத்தற்கு அரிய பரப்பையுடைய பாழ் என்னும் பிரகிருதி தத்துவத்தை (ஆன்மாவுக்குப் புறம்பானது எனறு) சிரவண மனன நிதித்தியாசங்களினால் உணர்ந்து உணர்ந்து, ஆன்மா வரை சென்று, அங்கே புண்ணிய பாவ காரியமாகிய சுக துக்கங்களைக் கழித்து அவற்றை விட்ட பின்பும் ருசி வாசனைகள் கிடக்குமாதலின் அவைகளும் நீங்கினால், அந்நாளிலே, அந்தப் பொழுதிலே பிரகிருதி தொடர்பற்ற முக்தி உறுதி; பற்றற்றவாறே அதுவே (அவ்வாறு விடுக்கைதானே) முக்தியாம்" என்று நம்மாழ்வார் நயமபட உரைக்கினறார்.

"நன்றாய் ஞானம் கடந்துபோய்
நலஇந்திரியம எலலாம் ஈர்த்து
ஒன்றாய்க் கிடந்த அரும்பெரும் பாழ்
உலபபில அதனை உணர்ந்துணர்ந்து
சென்று ஆங்கு இனபதுனபங்கள்
செறறுக் களைந்து பசையறறால்
அனறே அபபோதே வீடு அதுவே
வீடு வீடாமே."

★

## அறிவிப்பு

ஸப்தகிரிக்கெனறு ஒரு வருடம் அல்லது அதற்கு மேற்பட்ட காலத்திற்கு அனுப்பப்படும் சநதாத் தொகை மட்டுமே ஏற்றுக்கொள்ளப் படும். ஒரு வருடத்திறகும் குறைவான கால அளவுககாக அனுப்பப் படும் சந்தாத் தொகை ஏற்றுக் கொள்ளப்படமாட்டாது.

ஆண்டுச் சந்தா ரூ. 12/-

ஸ்ரீ வைகுண்டம்!

பரமபத நாதனும் தேவியரும் எங்கோ சென்றுள்ள தருணம். சங்கமும் சக்கரமும் மட்டுமே உள்ளனர்.

சக்கரத் தாழ்வான் ஓரக் கண்ணால் சங்கரையனைப் பார்க்கிறான். ஏளனமாகச் சிறிது சிரிக்கிறான். சங்கரையன் பாராதது போல் இருக்கவே, சுதர்சனன் மீண்டும் சிறிது உரக்கவே கனைத்துக் கவனத்தை இழுத்த பின் கேலியாகச் சிரிக்கிறான்.

வலம்புரியான் விழிக்கிறான். வினவுகிறான்-சுதர்சனா, சிரிக்கிறாயே தனக்குள்ளேயே. என்ன வந்து விட்டது உனக்கு?

"எனக்கொன்றும் வரவில்லை; உன்னைப் பார்த்தேன். சிரிப்பு வந்தது. என்னால் அடக்கிக் கொள்ள முடியவில்லை. சிரித்தேன்."

'வலம்-இடம், கீழ்-மேல் என்ற வேறுபாடுகள் அனைத்திற்கும் அப்பாற்பட்ட பரம்பொருளின் சந்நிதானத்தில் இதென்ன பேச்சு?"

'உன் சாமர்த்தியமான விளக்கம் ஏதும் வேண்டேன். நான் ஈசனின் வலக்கரமாக இருக்கிறேன் என்பது ஒன்று. நீ இடக்கரமாக இரு. இதில் எனக்கொன்றும் வருத்தம் இல்லை. ஆனால் .. உண்மையைச் சொன்னால், கோபம் கொள்ள மாட்டாயே?" சக்கரத்தாழ்வான் எள்ளி நகைக்கும் குரலில் கேட்கிறான்.

பஞ்சசனன் ஒரு வினாடி திகைத்து நிற்கிறான்.

'பகவான் எதற்குத்தான் உன்னை அநாவசியமாக, எங்கே சென்றாலும் சுமந்து செல்கிறாரோ? பகைவர்கள் மாய்ப்பது முழுதும் என் பணி.

# சங்கின் சஞ்சலம்

"என்னைப் பார்த்தா சிரித்தாய்?" காரணம்?"

'அப்படிக்கேள். சொல்கிறேன்' என்ற பீடிகையைக் கேட்டதுமே, வலம்புரியானுக்குச் சிறிது உள்ளம் கலங்குகிறது, இவன் என்ன சொல்வானோ தன்னைப்பற்றி என்று.

'நாம் இருவரும் எம்பெருமானின் இரு திருக்கரங்களிலும் என்றுமே இருப்பவர்கள்

'ஆம், அது முற்றும் சரி'

'அவசரப்படாதே. முழுதும் கேள்' என்ற சிறு குட்டுக் குட்டிவிட்டுச் சக்கரத்தாழ்வான் தொடர்கிறான்—நான் ஐயனின் திருக்கரத்தில் இருப்பது சரி. அவர்க்கு நான் தேவை. அவருடைய வலக்கரமாக விளங்குபவன் நான்...'

நீயோ அலங்காரமாக இடத்திருக்கரத்தில் என்றுமே இருப்பதோடு சரி. நீ நம்பெருமானுக்கு என்ன பணி செய்திருக்கிறாய்? நீயே சொல்லு.'

பஞ்சசனன் ஏற்கெனவே கூனிக் குறுகியவன் தலை குனிகிறான். சக்கரன் தொடர்கிறான் – எம்பெருமானின் திருநாமமே சக்கரபாணி என்பதை நீ மறந்தாயா?

வலம்புரியானின் வாய் துடிக்கிறது. அப்படிப் பார்த்தால், எவரும் சங்கு-சக்கரம் என்று என்னைத்தான் முதலில் சொல்வர். சக்கர-சங்கு என்ற பேச்சு வழக்கில் இல்லையே.

சுதர்சனன் சளைக்கவில்லை. 'சங்கு சக்கர சுவாமி எனும் போது, நான் எம்பெருமானை ஒட்டி இருக்கிறேன்; அவர்க்கு அடுத்தது நான். நீ அவரை விட்டுத் தள்ளியிருப்பவன். ஏற்கிறாயா இதை?"

வலம்புரியினால் வாய் திறக்க முடியவில்லை; சுருண்டு அமர்ந்துவிடுகிறான். சுதர்சனன் உருண்டு ஓடுகிறான் வெற்றி பெற்ற இறுமாப்பில்

ஸ்ரீ தேவி வருகிறாள். தனித்துப் பஞ்சசனன் குறுகிக் கிடப்பதைக் காண்கிறாள். பிராட்டி அன்புடன் அவனை விளிக்கிறாள். 'என்ன நேர்ந்தது உனக்கு? சோர்ந்து சுருண்டு கிடக்கிறாயே?'

அழமாட்டாக் குறையாக, அவ்வளவையும் வலம்புரியான் தேவிக்குச் சொல்கிறான்.

தேவிக்கும் மனம் சிறிது கலங்குகிறது; இதற்குள் அங்கே வந்து நிற்கிறார் சாட்சாத் திருமால். வழக்கமான புன்னகை ஒளிர கேட்கிறார்-என்ன விஷயம் இது? சுதர்சனன் அங்கே நிற்கிறான். வலம்புரியான் இங்கே கலங்கிய கண்களோடு கொஞ்சம் நீரிட்ட நிலையில் உள்ளான்.

பிராட்டி கூறுகிறாள்-நாதா, தங்களுக்குத் தெரியாததா இங்கு நடந்தது? சக்கரன் வலம்புரியானை ஏளனமாகப் பேசுகிறானாம்.

'ஆமாம், உன் மனசு பொறுக்குமா? இருவரும் ஒரே ஊர்க்காரர்கள் ஆயிற்றே?'

---

திரு. ர. வேங்கடரத்தினம்,
நெய்வேலி.

---

பகவான் கடைக் கண்ணினால் தேவியின் முகத்தைக் கவனிக்கிறார். லக்ஷ்மி தேவி பிறந்தது திருப்பாற்கடலில். சங்கமும் தோன்றியது ஆழ்கடலிலே தான். இதையே பரந்தாமன் குறிப்பிடுகிறார்.

தேவி "இதில் எனக்கும் ஒரு குட்டா?" என்கிறார். எம்பெருமான் நகைத்தவாறு விளக்குகிறார். "குட்டு அல்ல. நீ அவனைக் கண் கலங்க விட

லாமா என்றுதான் கேட்கிறேன். விளக்க வேண்டியதுதானே உன் மையை?''

பிராட்டி ஒரு கணம் வாய் திற வாது இருக்கிறுள்:

''விளங்கவில்லையா என் அருமை நாயகிக்கும்?'' எனக் கேட்டுவிட்டுத் திருமால் சிரிக்கிறுர்

லக்ஷ்மி தேவி அப்படியே நிற் கிறுள்.

''இன்னுமா விளங்கவில்லை. இப் பொழுது?'' எனக் கேட்டுவிட்டு ஐயன் உரக்க–அண்ட சராசரமுமே இடிந்து விழும் போலச் சிரிக்கிறுர். உலகமே ஒரு கணம் நடுக்குற்று ஓய் கிறது. வெளியே இருக்கும் சுதர் சனன் எட்டிப் பார்க்கிறுன். வலம் புரியான் திகைத்து நிற்கிறுன். பிராட்டியின் உடலும் ஒரு முறை நடுக்குற்று மீள்கிறது.

''புரிந்ததா இப்போதாவது? நர சிம்ம அவதாரத்தில் எங்கே போய் இருநதாய் என்று வாய் திறந்து கேளடா, வலம்புரி. இரணிய வதை யின் போது, சுதர்சனம் எனக்கு என்ன பணி செய்தானும், சொல்லச் சொல்லு. பார் இந்த என் கைந் நகங்களை. இன்னும் அந்த இரத்தக் கறை போகவில்லை!''

பகைவானின் திருக்கர விரல் நுனி களில் இரத்தச் செம்மை தெரிகிறது. வலம்புரியானுக்குச் சிறிது வலிவு வந்துவிடுகிறது. சுதர்சனனைத் தேடிச் செல்கிறுன்.

''எட்டிப் பார்த்தாயே, சுதர்சனு ஐயன் கூறியதைக் கேட்டாயா?''

''கேட்டேன். நன்ருகக் கேட் டேன்.''

''போதுமா? இன்னும் விளக்க மேண்டுமா உன் பிரமாதக் கைங்கரி யத்தை?''

சஙகரையனுக்குச் சுதர்சனன் சளைப்பதாக இல்லை.

''சரி, அப்படியே இருக்கட்டும. ஆக, இரணிய வதையின் பொழுது மட்டும் பகவானுக்கு நான் பயன்பட வில்லை. வல்லனுக்குப் புல்லும் ஆயு தம் அல்லவா? எம்பெருமான் தம் திருப்பற்களாலும் திருநகங்களிஞ லும் இரணியனைக் கிழித்துப் போட் டதில், அதிசயம் என்ன? அது அவர் திருவுள்ளம். என் கேள்வி, நீ எம் பெருமானுககு எப்பொழுதேனும் கைங்கரியம் புரிந்தாயா என்பதல் லவா? பதில் சொல்.''

# கல்கி அவதாரம் எப்போது?–ஒரு மறுப்பு

பூம்புகார் ஜி. சீனிவாசன், மாயூரம்.

அணமையில் ஸப்தகிரி இதழில் '' கல்கி அவதாரம் எப்போது?'' என்ற திரு ஏ. என். மாதவன் அவர்கள் எழுதிய கட்டுரையைப் படித்தேன்.

சூரிய சித்தாந்தப்படி!

| | | |
|---|---|---|
| கிருத யுகம் | 17,28,000 | ஆண்டுகள் |
| திரேதாயுகம் | 12,96,000 | ஆண்டுகள் |
| துவாபரயுகம் | 8,64,000 | ஆண்டுகள் |
| கலியுகம் | 4,32.000 | ஆண்டுகள் |

இவை நான்கும் சேர்ந்தது ஒரு சதுரயுகம் என்று அழைக்கப்படும். அதாவது ஒரு சதுர்யுகத்திற்கு 43,20,000 ஆண்டுகள். 71 சதுர்யுகங் கள் ஒரு மன்வந்தரம என்றும் 14 மன்வந்தரங்கள் ஒரு கல்பம் என்றும் கூறப்படும். உலகம் தோன்றிய நாட்களிலிருந்து இதுவரை 6 மன்வந் தரங்கள் முடிந்துவிட்டன. இப்பொழுது நடைபெறுவது 7வது மன் வந்தரம். இதில் கலியுகம் நடைபெற்றுக் கொண்டு இருக்கிறது; கலி யுகத்திற்கு மொத்தம் 4,32,000 ஆண்டுகள். அதில் 5085-வது வருடம் நடைபெறுகிறது. இன்னும் 426915 வருடங்கள் மீதி இருக்கின்றன. இவ்வாறு இருக்க அடுதத வருடம் அதாவது ஆங்கில ஆண்டு 1985-ல் கல்கி அவதாரம் நிகழும் என்றும் கி.பி. 2005-ம் ஆண்டு கல்கி போர்க் கோலம் பூண்டு நாஸ்திகர்களை அழிக்க புறப்படுவார் என்றும் கூறுவது சரியாகாது. கலியுகத்தில் 8-ல் ஒருபகுதி (அதாவது கலியுகத்தில் 8-ல் ஒருபகுதி) 54000 ஆண்டுகள் இருக்கும் போது கல்கி அவதாரம் ஏற் பட வேண்டும். ஆனுல் இன்னும் பாக்கி கலியுகம் இருப்பது 4,26,915 ஆண்டுகள். எனவே அவ்வாறு அடுத்த ஆண்டில் கல்கி அவதாரம் ஏற் படும்? ஜோதிட நூல்களில் குறிப்பிட்டுள்ள கணக்கின்படி இன்னும் சுமாராக 4 இலட்சம் ஆண்டுகள் கழித்தே கல்கி அவதாரம் எடுப்பார். சரியான ஆங்கில வருடம பார்ப்போமானுல் கி.பி. 428899-ம் ஆண்டு ஆகும். கலியுகத்தில் 8-ல் ஒருபகுதி இருக்கும் போது கல்கி அவதரிப் பார் என்ருல் கி பி. 374899-ஆம் ஆண்டு ஆகும். எனவே கல்கி அவ தாரம் கி பி. 1985-ல் அதாவது இந்த ஆணடு என்று கூறுவது சரி யானது அல்ல. கட்டுரையில் கடைசி பத்தியில் கலியுகத்தில் 8-ல் ஒரு பகுதி என்பது 34230 என்று குறிப்பிடப்பட்டுள்ளது. அது தவறு. கலி யுகத்தில் 8-ல் ஒரு பகுதி என்றது 54000 ஆண்டுகள் ஆகும்.

ஆதாரம்: ஜோதிட நூல்கள்

வலம்புரியான் வகையாகச் சிக்கித் தவிக்கிறான். விடை இல்லை வாய் திறக்க. உதடுகள் துடிக்கப் பிராட்டியின் சந்நிதானத்திற்கு விரைகிறான். அன்னை அனைத்தையும் கேட்கிறாள். ஐயனின் அற்புத லீலைகளில் இதற்கும் ஒரு சமாதானம் இருக்குமே என, பரந்தாமன் பால் திரும்புகிறாள். திருமால் திருமுகத்தில் புன்னகை ஒளி வீசிச் சுடர்கிறது.

அப்பேரொளியில் பிராட்டியின் திருமுக மண்டலமும் மின்னுகிறது.

''சுதர்சனத்தைச் சிறிது பொறுத்திருக்கச் சொல்''-திருமாலின் இம்மொழிகளைக் கேட்டு அன்னை வியப்புடன் நிற்கிறாள். 'சிறிது' என்றால், எவ்வளவு யுகங்கள் என்னும் குறிப்பு அந்நோக்கில் தென்படுகிறது.

பரமனே விளக்குகிறார். ''குருக்ஷேத்திரப் போர் என்று ஒரு பெரும் யுத்தம் மூளப்போகிறது, பார்த்துக் கொண்டே இரு. அங்கே எனக்கு வேலை வெறும் தேர் ஓட்டுவது மட்டுமே. சக்கரத்தை எடுத்துச் செல்லப் போவதே இல்லை. சுதர்சனம் துருப்பிடித்து விடாதபடி நீ பார்த்துக் கொள், என் அருமைத் தேவி!''

வெளியிலே நிற்கும் சுதர்சனத்திற்குப் பேரிடியாக இருக்கிறது ஐயனின் இப்பேச்சு.

பரந்தாமன் தொடர்ந்து சொல்கிறார்-ரத சாரத்தியத்தின் போது, சங்கம் எப்படியும் வேண்டும். என்னோடு கூடவே இருப்பான் பஞ்சசனன். அந்த யுத்தத்தில் அசுவத்தாமா என்ற ஒரு யானை இறந்து விழும். உடனே 'அசுவத்தாமா யானை ஒழிந்தாயிற்று' எனப் போர்க் களத்தில் பாண்டவரின் அறிவிப்புத் தொடரும். அந்தத் தருணம் இந்தச் சங்கரையன் மூலம் நான் 'யானை' என்ற சொல் காதில் விழாதவண்ணம் முழக்கம் செய்து, போரின் போக்கையே மாற்றப் போகிறேன். மாவீரன் அசுவத்தாமன் இறந்ததாகத் துடிதுடித்துப் போவர் பகைவர். இவ்வளவு சுவாரசியமான வேலையெல்லாம் வைததிருக்கிறேன் உன் அருமைப் பஞ்சசனனுக்கு!

இவ்வாறு ஐயன் திருவாய் மலர்ந்தருளுகிற தருணம், அங்கே சாயக் கொண்டையும் சுடர்க்கொடியுமாய் அழகு மின்னும் எழில் உருவாக வருகிறாள் கோதா நாச்சியார்-சாட்சாத் நம் ஆண்டாள். பகவானின் எழில் வதனத்தில் அற்புதக் குறுநகை மின்னி யோடுகிறது. பரந்தாமன் பகர்கிறார்-நல்ல வேளையில் வந்தாய், கோதா தேவி! பஞ்சசனன் இங்கே ஒரு நாழிகையாய்க் கண்ணீர் விட்டு அழாக் குறையாகக் கலங்கி நிற்கிறான். நீதான் அவனைச் சமாதானப் படுத்த வேண்டும். லக்ஷ்மி தேவி கூட இயலாமல் நின்றுவிட்டாள்.

ஆண்டாளுக்கு லக்ஷ்மிப் பிராட்டி நடந்தது அனைத்தையும் எடுத்து இயம்புகிறாள். புரிகிறது கோதா தேவிக்கு ஐயனின் கட்டளை. தேனினும் இனிய திவ்யத் தமிழில் ஆண்டாள் நாச்சியார் திருமொழிப் பாசுரத்தை ஐயனின் எதிரே இசையோடு வழங்குவாள்.

கருப்பூரம் நாறுமோ கமலப்பூ
நாறுமோ
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித்
திருக்குமோ
மருப்பொசித்த மாதவன் தன்
வாய்ச் சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்
லாழி வெண் சங்கே.

ஃ ஃ ஃ

கடலில் பிறந்து கருதாது பஞ்சசனன்
உடலில் வளர்ந்துபோய் ஊழியான்
கைத்தலத்
திடரில, குடியேறித் தீய அசுரர்
நடலைப படமுழங்கும தோற்றத்
தாய் நற்சங்கே!

ஃ ஃ ஃ

தடவரையின் மீதே சரற்கால சந்திரன்
இடையுவா வில்வந் தெழுந்தாலே
போல் நீயும்
வட மதுரையார் மன்னன் வாசு
தேவன் கையில்
குடியேறி வீற்றிருந்தாய் கோலப்
பெரும் சங்கே

ஃ ஃ ஃ

மன்னுகி நின்ற மதுசூதன் வாய்
அமுதம்
பன்னாளும் உண்கின்றாய பாஞ்ச சன்
னியமே.

ஃ ஃ ஃ

உண்பது சொல்லில் உலகளந்தான்
வாய் அமுதம்!

இப்பொழுது சுதர்சனன் தலை குனிவுடன் வலம்புரியானைப் பார்க்கிறான். வலம்புரியான் கோதா தேவியின் திருப்பாதத்தைப் பெருமிதத்தோடு நோக்குகிறான். எம்பெருமானும் பிராட்டி லக்ஷ்மியும் கோதையின் கீதத்தில் ஆழ்கின்றனர். ★

# ◦ நான் அறிந்த திருமலை ரகசியம் ◦

இந்த திருமலேசனின் விவித அலங்காரங்களை விவித வடிவில் காண வேண்டுமெனில் இத்திருமலையில் வாரத்தில் குறிப்பாக வியாழன் வெள்ளி ஆகிய இரு தினஙகள் தங்கினால்தான் முடியும். சாதாரணமாக வேங்கடாசலபதி என்றவுடன் நம்முன் தோன்றும் சர்வாபரணாலங்கார விக்ரஹத்தை, மாறுபட்ட கோணததில் அந்த இரு தினங்களில் காணலாம்.

வியாழக்கிழமை பகல் நிவேதனத்திற்குப் பிறகு நகைகள நீககப் பெற்று, முகம் நிறைநத நாமம் (திருமண்) பாதியாக குறைக்கப்பட்டு நேத்திர தரிசனம் என்ற பெயரில் காட்சி தருகின்றார். அன்னை சக்திக்கு அணிவிக்கப்படும் ஆடையான "பாவாடை"யும் இவருககு அணிவிக்கப்பட்டு திருப்பாவாடை என்ற பெயரில் அன்றைய தினம் உற்சவமாகக் கொண்டாடப்படுகின்றது. அன்றைய தினம் எலுமிச்சம் பழம் கொண்டு பூஜித்து வேங்கடவன் சக்தி ரூபிணியாய் (விஷ்ணு ரூபிணி) எண்ணி புளியோதரை (சித்ரான்னம் நைவேத்யம்) வைக்கின்றனர்.

அன்று மாலை ஆகாச மன்னனின் மருமகன் ஸ்ரீநிவாஸன் என்ற முறையில் இவர் (பூ ..அங்கி) பூலங்கி ஸேவையில் ஆகாச மன்னன கொடுத்த உடைவாளுடன் காட்சி தருகின்றார்.

இந்த பூலங்கி சேவை எனப்படுவது முழுக்க முழுக்க வேங்கடவனை மலர்களாலேயே அலங்கரித்தல் ஆகும். பூக்களாலேயே அங்கிபோல் அலங்கரிபபதால் பூலங்கி சேவை என்ற பெயர் ஏற்பட்டிருக்கலாம். பிறர் கொண்டு வரும் எந்த மலர்களைக் கொணடும் இவரை அலங்கரிப்பதில்லை. திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரால் திருமலையிலும் மற்ற இடங்களிலும் பராமரிக்கப்படும் தோட்டத்தில் மலரும் மலர்களான சம்பங்கி, ரோஜா, மனோரஞ்சிதம், மரிகொழுநது, துளசி போன்றவைகளாலேயே அலங்கரித்துப்பிறகு அந்த நிர்மால்யங்களை கண்ணாடி மாளிகைக்கு அருகில் இருக்கும் பூல பாவி என்ற தண்ணீர் இல்லாத கிணற்றில் போட்டு விடுகின்றனர். வியாழன் இரவு முடிய மறுநாள் வெள்ளி அதிகாலை சுப்ரபாத சேவை வரை வேங்கடவன் பூலங்கியிலேயே இருப்பார். பிறகு வெள்ளி காலை அபிஷேகம்.

புனிதமான ஆகாச கங்கை நீருடன பச்சைக் கற்பூரம், ஏலம், பன்னீர் போன்ற பலவாசனைத் திரவியங்கள் கலந்து வேதியர்கள் "ஸஹஸ்ர ஸீரிஷா புருஷ:," என புருஷ ஸூக்தம் முழஙக உலகங்காக்கும் வேங்கடத்தானை அபிஷேகிக்கும் காட்சியைக் காணக்கிடைத்தவர்கள் பெரும் பாக்கியசாலிகள் எனபதில் சிறிதும் ஐயம் இல்லை.

அபிஷேகம முடிநது ஆபரணங்கள் அணிவிககாமல் நூலாடையுடன் சந்தயாவந்தனம் முடித்து அலங்காரம்கூட செய்து கொள்ளாமல் பக்தர்கள் குறை கேட்பதற்கு அபிஷேகானந்தர தரிசனம என்ற பெயரில் காட்சி தரும் எங்கள் வேங்கடவன் போல் வேறெங்கேனும் கண்டதுண்டோ?

பச்சைக் கற்பூரம், புனுகு, கஸ்தூரி போன்ற விலை உயர்நத வாசனை திரவியங்கள் கலநத நாமம்; வேங்கடவனுக்கே ஆபரணம் நாங்கள் என பெருமைப்படும் வைர வைடூரிய சங்கு, சகர, கிரீடங்கள்; வைர அபய, வரத ஹஸ்தங்கள், பட்டுப் பீதாம்பரம், சாளக்ராம, சஹஸ்ர நாம ஹாரங்கள், வனமாலா வைஜயந்தி, இவற்றிற்கெல்லாம் மேம்பட்டதாய் கருதப்படும் துளசி மாலை இப்படிப்பட்ட சர்வாலங்கார நேத்ரானநதமான, கம்பீரமான, (ஏழுமலையான் எனறவுடன் நம் மனக்கண்முன் தோன்றும) தோற்றத்துடன் பக்தர்களின் கோரிக்கைகளுக்குச் செவி சாய்த்து உடனுக்குடன் பரிகாரம் கிடைக்க வழி வகுக்கும் நிலையில் வாரந்தோரும் வெள்ளி முதல் அடுத்த வியாழன் வரை காட்சி தருகிறார். இவருக்கு அணிவிக்கப்படும் பச்சை கற்பூர நாமம் ஸர்வரோக நிவாரண மஹா பிரசாதமாக கருதப்பட்டு விநியோகிக்கப்படுகின்றது.


திரு. S. சந்திரமௌலி,
திருப்பதி


இவரது கோயிலில் இவருக்காக (நிவேதனத்திறகாக) தயாரிக்கப்படும் பிரசாதங்கள் மிகவும் ருசி மிகுந்தவை. சர்க்கரைப் பொங்கல், வெண்பொங்கல், புளியோதரை, தத்யோதனம், கேசரி பாத், க்ஷீரான்னம் போன்ற அனைத்துமே மிகவும் சுத்தமான நெய்யினால் தயாரிக்கப்பட்டு வேங்கடவனுக்கு நிவேதிக்கப்பட்டு விநியோகிக்கப்படுகின்றது.

குடும்பம் குடும்பமாக, முதியவர், சிறுவர், பச்சிளம் குழந்தைகளுடன் பல மணி நேரம் க்யூ வரிசையில் காத்திருந்து வாடித் தளர்ந்து மாலவனைத் தரிசித்துவரும் பக்தர் கூட்டத்திற்கு அந்த வேளையில் வினியோகிக்கப்படும் பிரசாதங்கள் அம்ருத

### தி. தி. தேவஸ்தானத்தாரின்
# ஸ்ரீ பத்மாவதி தாயார் கோயில், திருச்சானூர்
### தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

5-00 முதல் 5-30 வரை—சுப்ரபாதம்
5-30 ,, 6-00 ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனைரூ.6-50 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்)
6-00 —நித்ய அர்ச்சனை (வருடத்திற்கு ரூ. 150/- செலுத்தும் கிருஹஸ்தர்கள் பங்கேற்கலாம்)
6-15 ,, 6-45 ,, —சுத்தி—முதல்மணி
6-45 ,, 1-00 மதியம்—ஸர்வதரிசனம்
1-00 ,, 1-30 ,, —சுத்தி, 2-வது மணி
1-30 ,, 7-00 இரவு —ஸர்வதரிசனம்
7-00 ,, 7-30 ,, —சுத்தி, இரவு மணி
7-30 ,, 8-30 ,, —ஸர்வதரிசனம்
8-30 ,, 9-00 ,, —ஏகாந்தசேவை

## வெள்ளிக்கிழமைகளில்

காலை

4-00 ,, 4-30 ,, —ஸர்வ தரிசனம்
4-30 ,, 5-00 ,, —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-50 (நான்கு நபர்கள் அனுமதிக்கப்படுவர்)
5-00 ,, 5-15 ,, —நித்ய அர்ச்சனை
5-15 ,, 5-45 ,, —சுத்தி, முதல் மணி
5-45 ,, 7-00 ,, —ஸர்வதரிசனம்
7-00 ,, 7-30 ,, —சாலிம்பு
7-30 ,, 9-00 ,, —தாயாருக்கு அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்)
9-00 ,, 10-00 ,, —அலங்காரம், 2வது மணி
10-00 ,, 8-00 இரவு —ஸர்வ தரிசனம்
7-00 ,, 8-00 ,, —கண்ணாடி மண்டபத்தில் ஊஞ்சல் சேவை. (ரூ. 150/-செலுத்தி பங்கேற்கும் இரு நபர்களுக்கு சுமார் 5 கிராம் எடையுள்ள வெள்ளிப் பதக்கம் வழங்கப்படும்)
8-00 ,, 8-30 ,, —இரவு மணி
8-30 ,, 9-00 ,, —ஏகாந்தசேவை

## ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

I தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 2/- (நபர் ஒருவர்க்கு)

**II ஆர்ஜிதம்**

(அ) பொங்கல் ¼ அளவு ரூ. 55/-
(ஆ) புளியோரை ,, ரூ. 50/-
(இ) தத்யோதனம் ,, ரூ. 40/-
(ஈ) கேஸரிபாத் ,, ரூ. 85/-
(உ) சர்க்கரைப் பொங்கல் ,, ரூ. 65/-
(ஊ) தோசைப்படி ,, ரூ. 35/-
(எ) ஸாகரபாத் ,, ரூ. 90/-
(ஏ) ஸீரா ,, ரூ.155/-

**III சேவைகள்**

(அ) நித்ய அர்ச்சனை ரூ. 150/- (ஆண்டொன்றுக்கு)
(ஆ) ஸகஸ்ரநாமஅர்ச்சனைரூ. 6-50
(இ) அர்ச்சனை ரூ. 1-00
(ஈ) ஹாரத்தி ரூ. 0-50
(உ) பூராபிஷேகம் (வெள்ளிக் கிழமையில் மட்டும்) ரூ 100-00
(ஊ) ஊஞ்சல் சேவை (வெள்ளிக்கிழமை மாலையில் மட்டும்) ரூ.150-00
(எ) திருச்சி உற்சவம் ரூ. 63-00
(ஏ) யானை வாகனம் ரூ. 32-00

* திருப்பதியிலிருந்து 3 கி.மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

துல்யமே என்பதில் ஐயப்பாடே கிடையாது. இலவசமாக கொடுக்கப் படும பிரசாதம் தீர்ந்துவிடினும் குறைந்த விலையில் தாராளமாக அன்ன ப்ரஸாதங்கள் கிடைக்கின்றன. சுவாமி தரிசனத்திற்குப் பிறகு வயிற்றை நிரப்ப எங்குச் செல்வது என்ற எண்ணத்தை தூண்ட விடாமல் தரிசனம் முடிநத உடன் நம் களைப்பைப போககுமவண்ணம் ருசி மிகுந்த பிரஸாதங்களைத் தாராளமாக கிடைக்க வழிவகை செய்திருக்கும் திருமலை திருப்பதி தேவஸ்தானத் தாரைப பாராட்டாமலிருக்க முடியாது

அன்ன ப்ரஸாதம் உண்டு மகிழ்ந்தால் அடுத்து ஊருக்கு கொண்டு செல்ல வசதியான பிரஸாதங்களான லட்டு வடை முதலியனவற்றின் மணம் நம் மனதைக் கவரும். வசதிக் கொப்ப பொருளாதார நிலைமைக் கேற்ப அங்கு விதவிதமான லட்டு, வடை, அப்பம், தோசை, தேன் குழல், ஜிலேபி, போளி போன்ற பிரஸாதங்கள் பெறலாம்.

ஒரு நாளைக்கு அங்கு எவ்வளவு லட்டு தயாராகின்றது என்றறிந்தால நமக்கு வியப்புதான மிஞ்சும். இவ்வளவு அதிகமான லட்டு தயாரித்து பக்தர்களுக்கு விநியோகிக்கும் தேவாலயம இந்தியாவில் வேறு எங்கேனும் உள்ளதா என்பது சந்தேகமே. அதே போல இந்த புண்ணிய பூமியான வேங்கட மலையில் புண்ணியம் செய்ய வேண்டுமென்றவர்களின் கோரிக்கைப்படி அவரவர்கள் விரும்பும் நன்னாளில் அவர்கள் பெயரில் (மண நாள, பிறந்த நாள், நினைவு நாள் போன்ற நாட்களில்) இக்கோயிலில் தரிசனம் செய்யும் பக்தர்களுககு இலவச உணவு பங்கீட்டு முறை அவர் அவர் வசதிக கொப்ப செய்ய வழி வகை செயது மக்களிடம தருமசிந்தையினை வளர்க்கும் ஆலயம் வேறெங்கேனும் உள்ளதா என்பதும் சந்தேகமே! ○

# கீதை காட்டும் நல்வழி

தெய்வாஸுர ஸம்பத் விபாக யோகம்.

**அத்தியாயம்—16.**

**பகுதி—1.**

நல்லதும், தீயதும் சேர்ந்தது தான் இவ்வுலகம். மனிதர்களிடையிலும் இவ்விரு பிரிவுகள் எங்கும் காணப்படுகின்றன. நற்குணங்கள் வாய்க்கப் பெற்றோரை தெய்வாம்சம் பொருந்தியவர் என்றும், தீய குணங்கள் மிகுந்திருப்போரை அசுரப் பிறவிகள் என்றும், நாம குறிப்பிடுகிறோம் இல்லையா? இந்த அத்யாயத்தில் பகவான் தெய்விக குணங்கள் என்னென்ன, அவை வாய்க்கப் பெற்றிருப்போரின் தன்மைகள் யாவை, அதுபோல அசுர குணங்கள் யாவை, அவை பொருந்தியுள்ளோர் எப்படிச் செயல்படுவர் என்பது பற்றிய விவரங்களை மிகத் தெளிவாகத் தெரிவிக்கிறார். இவ்விரு எதிரிடை குணங்களைப் பற்றி விளக்கமாக இயமபுவதால இந்த அத்யாயம் 'தெய்வாஸுர ஸம பத் விபாக யோகம' என்றழைக்கப்படுகிறது.

இந்த அத்யாயத்தின் முதல் மூன்று சுலோகங்களில் தெய்விகத் தன்மையின் இலக்கணம் தெரிவிக்கப்படுகிறது.

**ஸ்ரீ பகவானுவாச:**

அபயம் ஸத்வஸம்சுத்திர்
ஞானயோக வயவஸதிதி: |
தானம தமஸ்ச யக்ஞஸ்ச
ஸவாத்யாயஸ்தப ஆர்ஜவம் ‖

(16-1)

'அஞ்சாமை, உளளத் தூய்மை, ஞானத்திலும் யோகத்திலும் நிலை பெற்றிருத்தல், கொடை, புலனடக்கம், யாகம், மறைநூல் வாசித்தல், தவம, நேர்மை'

நல்லதும தீயதும் இவ்வுலகில் எங்கும் கலந்தே காணப்படுகின்றன. நல்லதை நாடி தீயதைத் தவிர்ப்பதுவே நமது கடமையாகும். இதறகு முதறகண் நல்லது எது, தீயது எது என்பது நமக்கு நன்கு தெரிந்திருக்க வேண்டும். மனிதர்கள அனைவரும் புறத்தோற்றத்தில் மனிதர்களாகத் தோற்றந்தரினும்

திரு. டி. கே. நாராயணன்,
M.Sc., M.Phil.,
ஆசிரியர் "சமயஜோதி" மதுரை.

அவர்களது சுபாவத்தைப் பொறுத்து தேவர்களாகவோ, அல்லது அசுரர்களாகவோ செயல்படுகின்றனர் நம்மிடம் ஸத்வ, ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்கள் யாண்டும் செயலபட்டுக கொண்டிருக்கின்றன. நமது குணங்களுக்கும நாம் செய்யும செயல்களுக்கும் இடையில் நெருஙகிய தொடர்பு உண்டு. எந்தெந்த குணங்கள் நமமிடம மிகுந்து காணபபடுகின்றனவோ, அதற கேற்றவாறு நமது செயல்களும் அமையும.

ஸத்வ குணம் வாய்க்கப் பெற்றவன் நல்ல செயல்களில் ஈடுபடுவான். எது நல்ல செயல்? எநத ஒனறு தனககும, பிறருக்கும் நல்லதைத தருமோ அது நலல செயலாகிறது. மாறாக ராஜஸ, தாமஸ குணஙகளமிககோா தீய செயல்



களில் ஈடுபடுவர். அதனால் அவர்கள் தங்களுக்கும், பிறருக்கும் தீயதைத் தேடிக் கொள்ளுவர்.

'தீயது ஏன் நிலவ வேண்டும்? ஏன் கடவுள் தீமையைப் படைத்தார்? நல்லதை மட்டும் படைத்திருந்தால் இத்தனை சிக்கல்கள் உலகில் தோன்றியிருக்காதல்லவா?' என்று சிலர் கேள்விகளைக் கிளப்புவர். ஏன்? நமது மனத்திலே கூட இத்தகைய சந்தேகங்கள் கிளம்பும். இத்தகைய கேள்விகள் 'அதி பிரச்சனைகள்' எனப்படும் ஆங்கிலத்தில் அவை 'transcendental questions' எனப் பொருள்படும். அதாவது சாதாரண ஜனங்களுக்கு இவற்றிற்கான விடை தெரியாது அல்லது புரியாது. ஆத்ம ஞானம் கைவரப் பெற்றால்தான் இதற்கான விடை தெரிய வரும். அதுவரை தீமை இருப்பதை ஒப்புக்கொண்டு, அதை நீக்கி நல்லதை அடைவதற்கான முயற்சிகளில் நாம் ஈடுபடுவதுதான் அறிவுடைமையாகும்: இல்லையெனில் முட்டை முதலில் வந்ததா அல்லது கோழி முதலில் வந்ததா என்ற கேள்விக்கு விடை காண முயன்ற மூடனின் முயற்சியை அது ஒக்கும். சரியான விடையும் கிட்டாது. நேரம் வீணாகும். அறிவும் குழப்பமடையும்.

தெய்வீகக் குணங்களை பகவான் தெய்வஸம்பத் என்று அழைக்கிறார். தெய்வ ஸம்பத ஒருவனை மென்மேலும் தூயவனாக்கி தெய்வ நிலைக்கு உயர்த்துகிறது. தெய்வீக குணத்தில் முதலாவது இடத்தைப் பெறுவது 'அபயம்' என்ற குணமாகும்.

அபயம்: தெய்வத்திடம் அயராத நம்பிக்கை உள்ளவன் எதற்கும் பயப்படமாட்டான். பயம் என்பது எப்படி உண்டாகிறது? தனக்கு அன்னியமாக மற்றொன்று — உள்ளது என்று எண்ணும்பொழுதும், உண்மைக்கு மாறாக நடந்து கொள்ளும் பொழுதும் நம்மை அறியாத பயம் ஒன்றிற்கு நாம் இலக்காகிறோம். இதற்கு மாறாக 'எல்லாம் இறை சொரூபமே' 'என்னிலிருந்து பிறிதாக மற்றொன்றில்லை'. 'இறைச் சக்தி என்னில் வியாபித்து என்னை வழி நடத்துகிறது', என்று எண்ணி ஒருவன் செயலாற்றும்பொழுது அவன் அச்சத்தைக் கடந்தவனாகிறான். 'நாமார்க்கும் குடி அல்லோம். நமனை அஞ்சோம், நரகத்தில் இடர்ப்படோம்' என்றாரே, அந்த மகான் தெயவ ஸம்பத்தான அபயம் வாய்க்கப் பெற்றவர். 'எந்த உயிருக்கும் தீங்கு செய்யாதவன் எந்த உயிரைக் கண்டும் பயப்படத் தேவையில்லை. எந்நிலையிலும் பொய் பேசாதவன், எவரிடமிருந்தும் லஞ்சம் வாங்காதவன், எதற்கும் அஞ்ச மாட்டான். உண்மை, வாய்மை, மெய்மை என்னும் கவசங்களை அணிந்தவன் பயம் அற்றவனாவான். 'அஞ்சி, அஞ்சிச் சாவார், இவர் அஞ்சாத பொருளில்லை' என்பது தெய்வாம்சம் வாய்க்கப்பெறாத சாதாரண மனிதர்களது இயல்பாகும்.

பெருநிலையை அடைந்த துறவிகள் மற்றும் மகான்கள் பயம் அறவே அற்றவர்களாவார்கள். அலெக்ஸாண்டர் மாமன்னன் கையில் பளபளக்கும் கூரிய வாளை வைத்துக்கொண்டு, 'நீ எனக்கு அடிபணியவில்லையேயானால் இந்த வாளால் உன்னை வெட்டி வீழ்த்தி விடுவேன்' என்று சிந்து நதிக்கரையில் தனக்கெதிரே அமர்ந்திருந்த ஹிந்து முனிவரைப் பார்த்துக் கர்ஜித்தபொழுது, அவர் அட்டஹாசமாகச் சிரித்துக்கொண்டே, 'நீ ஒரு முழுப் பொய்யன் என்னை உன்னால் ஒருபோதும் வெட்டவும் முடியாது, எரிக்கவும் முடியாது. நான் அழியும் இந்த உடல் அல்ல. அழியாத அமர ஆத்ம சொரூபம் நான்' என்று நிதானமாகச் சொன்னாரே, அவர் 'அபயம்' என்ற தெய்வ ஸம்பத்' வாய்க்கப் பெற்றவர் ஆவார். 'cowards die many time before their death' என்ற ஷேக்ஸ்பியரின் வாக்கியம் அஞ்சிச் சாகும் பேதைகளுக்குப் பொருந்தும்.

தெய்வ விக்கிரகங்கள் அபயஹஸ்தத்தைப் பெற்று விளங்குவது இறைவனை அண்டினவர்களுக்கு, இறைவனது அருள் வாய்க்கப் பெற்றவர்களுக்கு அச்சம் ஏற்படத் தேவையேயில்லை என்பதை விளக்குவதற்காகவேயாகும்.

ஸத்வஸம்சுத்தி: உள்ளத் தூய்மை, தூய வாழ்க்கை என்பது இதன் பொருள். தீமைகள் எங்கனும் நிலவும் இந்நாளில் உடலையும், உள்ளத்தையும் தூய்மையாக வைத்துக்கொள்வது என்பது மிகக் கடினம்தான். எனினும் பொய் பேசாதிருத்தல் உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசாதிருத்தல், வஞ்சகம், சூது, பொறாமை இவற்றினின்று நீங்கி நிற்றல் ஆகியவை முடியாத காரியமல்ல. முயன்றால் எதுவும் முடியும்.

வடக்கு திசையையே யாண்டும் காட்டி நிற்கும் திசைகாட்டி கையில் இருக்கையில் எப்படிக் கப்பல் மாலுமி ஒருவனால் திசை தவறிப் போக முடியாதோ, அது போல இறையின்பத்தில் லயித்து தன்னில் தானாய் யாண்டும் லயித்திருக்கும் ஒருவனிடம் தூய்மையன்றி வேறு அசுத்தம் எதுவும் தீண்ட இயலாது மனத் தூய்மைக்கு இறை பக்தி அவசியம். மனத்துக்கண் மாசு அற்றவன் உண்மையான பக்தனாவான்.

ஞானம்: சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருப்பதற்கேற்ப குரு ஒருவரிடமிருந்து எது நித்தியம், எது அநித்யம், எது அழியக் கூடியது, எது அழியாதது என்ற உண்மையான அறிவைப் பெறுவது ஞானமாகும். 'நான் இந்த அழியும் உடல் அல்ல, மனம் அல்ல, பொறி புலன்கள் அல்ல....அழியாத ஆன்மாவே நான்' என்ற உண்மையைத் தெரிந்துகொண்டு அதற்கேற்பு வாழ்தல் ஞானியின் தன்மையாகும்.

(தொடரும்)

# மார்கழி நீராடி

ஆண்டாள் அருளிச்செய்த 'திருப்பாவை' யில் ஒவ்வொரு பாசுரமும் சொல் நயம், கவிநயம் கொணடு இலக்கண சுத்தியோடு அமைந்திருப்பது மட்டுமின்றி மனதை மயங்கச் செய்யும் தமிழின்பம் கலந்திருப்பதை மறுக்க முடியாது.

"சீர்மல்கும் ஆய்ப்பாடிச்
செல்வச் சிறுமீர்காள்... "

என்ற முதல் பாசுரத்திலிருந்து, 'செங்கண் திருமுகத்துச் செல்வத் திருமாலால் எங்கும் திருவருள் பெற்று இன்புறுவர்' என்று முடிக்கும் கடைசி பாசுரம் வரை ஒவ்வொன்றிலுமே மங்களகரமான சொற்றொடர்களைக் கொண்டு ஆக்கித் தந்துள்ளார்.

இயற்கையோடியைந்த வாழ்க்கை நடாத்திய அக்கால மாந்தரின் அறிவுச் செழிப்பை விளக்கததான் எத்துணை இனிய வாக்கியங்கள்!

'கீழ்வானம் வெள்ளென்று எருமை சிறுவீடு, தூமணி மாடத்துச் சுற்றும் விளக்கு, வெள்ளியெழுந்து வியாழமுழக்கம், செங்கழு நீர் வாய் நெகிழ்ந்து ஆம்பல் வாய் கூம்பல், பந்தல் மேல் பல்கால் குயிலினங்களின் கூக்குரல், கீசு கீசென்று ஆனைச்சாத்தானின் பேரரவம், நாற்றக் குழல் முடியில் கந்தம் கமழ்தல்-இன்னொன்ன இலக்கியச் சுவை மிகு சொற்கள் யாவுமே கவிச்சக்ரவர்த்தி கம்பன் போற்றிய "ஐந்திணை நெறியளாவல்" என்ற இலக்கணத்திற்குட்பட்டிருப்பதைக் காண்கிறோம்! அதாவது, குறிஞ்சி, முல்லை, மருதம் நெய்தல், பாலை ஆகிய ஐந்திணைகளைப் பற்றிய விவரங்களை ஒருங்கு சேர ஆக்கிய கைவண்ணம் மிளிர்கிறது!

கண்ணனின் அவதார மகிமை பேசு முன்பு 'மானுடர்க்கென்று பேசில் வாழகில்லேன்யான்' என்று பரந்தாமன் மேல் பக்திப் பரவசம் மட்டும் மல்லாது மணந்தால் திருவரங்கத்தான் ஒருவனை மட்டுமே மணப்பேன் இன்றி, காலம் முழுதும் கன்னியாகவே வாழ்வேன்' எனறு எம்பெருமானிடம் ஒருமித்த தெய்வீகப் பேரமை கொண்டிருந்த சூடிக்கொடுத்த சுடர்க் கொடியாம் ஆண்டாளின் அவதார மகிமை அனைவரையும் ஈர்க்கும்!

ஸ்ரீ ஜனகமாமன்னன் வேள்வி நடாத்த வேண்டி பூமியைச் சமன் செய்யும் காலை கொழுக்கலப்பைக் கால் இடறிய பேழையில் கண்டெடுத்த எழிலரசி சீதையைப் பெற்ற போது மகிழ்ந்ததைப் போல், நாராயணு என்னும் நாமம் கண்டு, மலர் தொடுத்து பூஜித்து வந்த 'விஷ்ணு' சித்தர்' நந்தவனத் திருத்துழாய்ச் செடியை சமன் செய்ய பூமியைக் கிளர, தங்கப் பேழையில் தளிர்நடையாள் ஆண்டாளைப் பெற்றுப்பூரித்துப் போனார்!



அன்று முதல் தான் நடத்தும் பூஜைக்குத் தக்கதோர் உதவி கண்ட சந்தோஷத்தில் - தயங்காது தன் பணிகளில் சிலவற்றைத் தன் மகளுக்கும் பங்களித்தார்.

"புஷ்ப வாஸனை பூவையருக்கே உரியது" என்பதை மெய்ப்பிக்கவோ என்னவோ .... ஆண்டவனுக்காகக் கட்டிய அழகிய மாலையொன்றை அன்றைய தினம் மட்டும் தனது அழகிய தோளில் சார்திய பின் கொடுத்தாள். காலம் கடந்து உண்மை புணர்ந்த விஷ்ணுசித்தர் 'அபசாரம் செய்து விட்டோம்' என்று ஆத்ம பலமிழந்து தவித்தார். ஆனால்...... அவதார புருஷியான ஆண்டாளை ஆள்வதற்கு அரங்கத்தானே தானே வருவதாகக் கூறக்கேட்டு ஆச்சர்யமடைந்தார். அன்று முதல் "சூடிக் கொடுத்த சுடர்க் கொடி" யாக ஆண்டாள் - தோழியர் சேர, மார்கழித் திங்கள் தோறும் யமுனையில் நீராடி, கோபியர் கண்ணனை அடைய கைக்கொண்ட வழியினைத் தானும் கைக் கொண்டு பாவை நோன்புற்று பரந்தாமனை அடைந்ததைக் காண்கிறோம்.

"முயற்சி தன் மெய் வருத்தக்கூலி தரும்" என்றபடியால் தன் ஐம்புலன்களையும் வருத்தி அருந்தவம் கிடந்து ஆண்டவனின் பாதம்சேர்ந்த அடியார்களின் கதைகளைப்போலவே ஆண்டாளின் கதையும் அமைவதைக் காண்கின்றோம். ★

"சிங்கை" மாறன்,
திருவள்ளூர்.

# ★ நஹி நிந்தா நியாயம் ★

திரு. கே. நாகராஜன்—திருக்குணம.

புராணங்களிலே ஒன்றுக்கொன்று வித்தியாசமாக சிவன்தான் உயர்ந்தவர் விஷ்ணுதான் உயர்ந்தவர் என்று காட்டும்படியான கதைகள் வருகின்றன. அவை எல்லாம் அந்த அந்தக் குறிப்பிட்ட சமயத்தில் ஒன்றினிடமே இதுதான் பரமாத்மா என்று நாம் ஆழமாக அதில் ஈடுபட்டு நிற்பதற்காகச் சொன்னது எனறுதான் எடுத்துகொள்ளவேண்டும். இதையே நஹி நிந்தா நியாயம் என்று சொல்வார்கள். அதாவது ஒன்றைத்தாழ்த்தியது போலச் சொன்னது உண்மையில் அதை நிந்திப்பதற்காக அல்ல. இன்னொன்றை இதுவே சகலமும் என்று கெட்டியாகப்பற்றிக் கொள்ளச் செய்வதுதான் இதன் உள்நோக்கம் ஆகும்.

ஒரே பரமாத்மாதான் பல மூர்த்திகளாக இருக்கிறார். நம்மில் ஒவ்வொரு மூர்த்தியிடம் அலாதியான ஒரு பிடிமானம் உண்டாகிறது. அவரவருக்கும் அந்தப் பிடிப்பையே உறுதிப்படுத்திக் கொடுப்பதற்காக அந்த மூலப்பரம்பொருளாகிய பரமாத்மாவே வேதஸ்வருபத்தில் ஒன்றை இன்னொன்றிடம ஒரு சமயம் குறைத்துக கொள்கிறார். தஞ்சாவூர் பக்கம் திருக்கண்டியூர் பரமேஸ்வரன் பிரமனின் சிரசைக கிள்ளிய சாப விமோசனம் பெற மகாவிஷ்ணுவிடம் தன்னை குறைத்துக கொள்வதாக ஐதிகம்: திருவிழிமலையில் அநத மகாவிஷ்ணு சக்கரம் பெறுவதற்காக பரமேஸ்வரனைப் பூஜித்து அர்ச்சிக்கின்றார். அப்போது ஒருகமலம் குறைவுபட தனது கண்ணையே பறித்து சிவனை அர்ச்சிக்கின்றார். இங்கு ஈஸ்வரனைக் காட்டிலும் தன்னைக் குறைத்துக்கொள்கிறார். அங்கே கண்டியூரில்பெருமான் ஹரசாபவிமோசனராக, மகாபாபத்தையும், சாபத்தையும் போக்குகின்ற கருணாமூர்த்தி என்ற சாரத்தையும், திருவிழிமலையில் கணணைக்கூடத் தயங்காமல் கொடுக்கிறதுதான் பக்தி என்னும் சாரத்தையும் நாம் எடுத்துக்கொள்ள வேண்டும். சிருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் என்கின்ற ஆக்கல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழிலையும் ஒரே பரம்பொருள் தான் செய்கிறது. ஒரே சைதன்யம் தான் மூன்றுக்கும் காரணம். அந்த சைதன்யம் என்பது மூப்பட்டை லாந்தருக்குள் இருக்கின்ற விளக்கு மாதிரியாகும். மூன்று பட்டையில் ஒன்று சிவப்பு. அதுதான் சிருஷ்டி. அதனால்தான் பிரம்மாவை சிவப்பு நிறமாகச் சொல்வார்கள். தற்காலத்திலே ஜனனஉற்பத்திக் கட்டுப்பாடடிற்கு சிவப்பு முக்கோணம் இதனால்தான் போலும. முப்பட்டைவிளக்கில் மற்றொருபட்டை நீலம். சர்வம் விஷ்ணு மயம் ஜகத் என்று உலகத்தில் விஷ்ணுவாகிய பரம்பொருள வியாபித்து இருக்கின்றது. அவருடைய லீலைதான் இந்த உலகமே என்றும, ஒரு வஸ்துவானது எரிந்து கரியாகி அடியோடு நீற்றுப்போகாமல் தன ரூபத்தோடேயே இருக்கின்ற நிலை இது. அதனாலேயே கரியான், நீல மேனியான் எனறெல்லாம் விஷ்ணுவைச் சொல்கிறோம். முப்பட்டை லாந்தரில் மூன்றாவது பக்கக் கண்ணாடியில வண்ணம் பூசாமலேயே விட்டிருக்கிறது அதாவது ஞானத்தில் எல்லாம் எறிகிறபோது முதலில் கரிக்கட்டை ஆயிற்று அதையும் போட்டு எரிக்கின்றபோது ரூபமே இல்லாமல் நீற்று சாம்பலாகிவிடுகிறது. இது சுத்த வெளுப்பு நிறம். இதனையே பரமாத்ம ஸ்வரூபம் என்றும் கூறுவர். ஒரே விளக்குதான் சிவப்பு பட்டையால் தெரிகிறபோது பிரம்மா. அதுவே நீலப்பட்டை வழியாய் தெரிகிறபோது விஷ்ணு. அதுவே வெள்ளைப் பட்டை வழியாய் தெரிகிறபோது சிவன். இதையே "ஓர் உருவே மூவுருவாய்" என்று பாடினார்கள். பதினெண்புராணங்கள் நம் மதத்திற்கு ஓர் ஆதாரமாக இருக்கின்றன. இவற்றில் சிவபரமானவைகளும் விஷ்ணு பரமானவைகளும் இருக்கின்றன. சைவம்தான் பிரதானம் அல்லது வைணவம்தான் பிரதானம் என்று கட்சி கட்டினால் கட்சிதான் நிற்கும், சண்டைதான் நிற்கும். தெளிவு ஏற்படாது. ஒன்று "சத்". அதை ஞானிகள் பலபேர்களில் சொல்கிறார்கள்.

தேவர் குறளும் திருநான்மறை முடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும— கோவை
திருவாசகமும் திருமூலர் சொல்லும்
ஒரு வாசகம் என்று உணர்.

★

16-ம் பக்கத் தொடர்ச்சி)

டிப் பாபம் நீங்கப் பெற்று ஸ்ரீவைகுண்டநாதனுக்குத் தொண்டு செய்யலாம், கடியுண்ட பாம்பு வலி தானுலோவெனில் இங்கேயே ஸ்வாமி புஷ்கரிணியில் ஸ்நாநம் செய்து தேவரீருக்கே அடிமை செய்யலாம், இவ்விரு வகையிலும் தீங்கேதுமில்லையென்றெண்ணி விஷம் தீர்க்க முயலாமல் வெறுமனே இருந்தேன் என்று விண்ணப்பித்து ஸுகமாகவே இருந்தார்.

## அனந்தாழ்வானுடைய ஆசார்ய பக்தியின் உறுதி

ஒருசமயம் யமுனைத்துறைவர் மண்டபத்தில் அதிகமான புஷ்பமாலைகளைத் தொடுப்பதிலேயே ஊன்றியிருந்த அனந்தாழ்வானுடைய மனவுறுதியைச் சோதிக்க விரும்பிய பகவான் அவரை அழைத்து வரும்படி அர்ச்சகர் வாயிலாக ஓர் தூதனை அனுப்ப, அவன் வந்து அழைக்க, அப்போதே வராமல் புஷ்பமாலை தொடுக்கும் காரியத்தை முடித்துப் பூமாலை நிறைந்த குடலையைச் சிரஸ்ஸில் வைத்துக் கொண்டே வந்த அனந்தாழ்வானை 'நான் அழைத்த போதே நீர் ஏன் வரவில்லை? எனது ஆணையை மறுத்த உம்மை இங்கிருந்து துரத்திவிட்டேனாகில் என் செய்வீர்' என்று பகவான் கேட்க 'பகவானே திருவேங்கடநாதனே உமக்கு என்ன நஷ்டம்? எனக்கோவெனில், மாலதி (குடமல்லிகை) மலர் மொக்குகள் மலர்ந்துவிட்டால் பிறகு தொடுக்க முடியாமல் போய்விடுமென்றும் மணமும் குலைந்து போகுமென்றும் நினைத்ததனால் அப்போதே வர அவகாசம் இல்லாமற் போயிற்று. மேலும் ஆசார்யரான எம்பெருமானார் ஆணையிட்ட தொண்டையும் விட்டு விட்டு மற்ற உமது கைங்கர்யத்தைச் செய்யவேணுமென்ற நிர்ப்பந்தம் ஏதுமில்லை. 'பரன் சென்று சேர் திருவேங்கட மாமலை' என்று (திருவாய்மொழி 3-3-8) பணிக்கும் தத்வ தர்சிகளில் (ஆத்மஸாக்ஷாத்காரம் பெற்றவரில்) தலைவராகிய நம்மாழ்வார் — இங்கு விளங்கும் திருவேங்கடமலையில் நடுவில் வந்து தேவரீர் சேர்ந்ததாகக் கூறுவதனால், தேவரீர்க்கும் அடியேனுக்கும் சமஉரிமையுள்ள இம்மலையில் ஒருவாரம் முந்தி வந்த மாத்திரத்தினால் தேவரீர் அடியேனை எங்ஙனம் துரத்தத் தக்கவராவீர்? மதுரகவியாழ்வார் அருளிய கண்ணிநுண் சிறுத்தாம்பைக் கற்று அவருடைய நிலையை நடைமுறையில் கொண்டு ஆசார்யரையே தஞ்சமாகப் பற்றியதனால் மதுரகவிதாஸனுக்குந் தன்மையைப் பெற்றுள்ளவனாக அடியேனை தேவரீர் அறிகிலீரோ' என்று பதிலளித்தார். அவருக்கு ஆசாரியர் திறத்தில் ஏற்பட்ட அத்தகைய ஊற்றத்தின் உறுதியைக் கண்ட பகவான் மிக மகிழ்ந்து, 'ஆசார்யரிடம் உமக்கு உண்டான உறுதியான நிலையினால் நாம் மிகவும் இன்பமடைந்தோம். உமக்கு வேண்டியது என்ன? மோக்ஷமோ ராமாநுஜர் திருவடிகளையே தஞ்சமாகக் கொண்ட உம்முடைய கையிலேயே இருக்கிறது. ஆதலால் அதை நான் கொடுக்க வேண்டிய அவசியமில்லை. வேறெதையாவது விரும்பிக் கேளும்' என்று கேட்க, தம்மை மிகமிக அதிர்ஷ்டசாலியாக நினைத்த அனந்தாழ்வான் 'தேவரீர்க்குத் தொண்டு புரிவது ஒன்று தவிர அடியேனால் விரும்பப்படுவது வேறென்ன இருக்கிறது? அதுதன்னையே இங்கும் அங்கும் அடியேனுக்கு இடையறாமல் நடக்கும்படி தேவரீர் வளர்த்தருள வேணும்' என்று வேண்டிக்கொண்டார். அவருடைய அவாவற்ற நிலையைக் கண்டு மிக மகிழ்ச்சி எய்திய பகவான் 'உம்மைச் சேர்ந்தாரோடு தொடர்புடைய மனிதர்களுக்கும் விலங்கு பறவை முதலியவற்றிற்கும் நான் மோக்ஷமளிக்கக் கடவேன்' என்று விசேஷவரமாகிய பரிசையளிக்க, அதனைப் பெற்ற அனந்தாழ்வான் மகிழ்ச்சியடைந்து, மதுரகவிகளின் மனவுறுதியைப் பெற்ற நமக்கு இத்தகைய பரமனது அருள் கிடைத்த படியினால இது முதற்கொண்டு நம்மைச் சேர்ந்தவர்களுக்கு 'மதுரகவி தாஸன்' என்பதே தாஸ்யநாமமாக (அடிமைப் பெயராக) ஆகக் கடவதென்று நியதியை ஏற்படுத்தினார். அது தொடங்கி அவர் எல்லோராலும் ஆசாரியராகப் பற்றப்பட்டு விளங்கினார்.

## அனந்தாழ்வான் மதிள் கட்டும் வழியிலிருந்து செண்பக மரம் ஒதுங்கி இடங்கொடுத்தது

அனந்தாழ்வான் மதிளும் கோபுரமும் கட்டுவிக்கும் போது, அதன் பக்கத்தில் உண்டானதாய் நாற்புறங்களிலும் பரவிய பல கிளைகளையுடைய செண்பக மரம் ஒன்று மதிள் கட்டத் தடங்கலாய்க் குறுக்கே நிற்க, அதனால் அதனை வெட்ட வேண்டிய சந்தர்ப்பத்தில், அவர் 'திருவேங்கடமென்னும் எம்பெருமான் பொன் மலைமேல் ஏதேனுமாவேனே' என்று ஸ்ரீகுலசேகராழ்வார் பெருமாள் திருமொழி (4-10)யில் அருளியபடி எந்த ஆழ்வார் இங்ஙனம் மரமாக அவதரித்தாரோ தெரியவில்லை. இத்திருமலையிலுள்ள ஸ்தாவர ஜங்கமங்கள் (அசையாப் பொருள்கள் அசையும் பொருள்கள்) எல்லாம் அப்ராக்ருத (பரமபதத்திலிருந்து இங்கு வந்த) ப்ராணிகள் என்பதாகவன்றோ புராணத்திலும் சொல்லப்பட்டுள்ளது. ஆகையால் இது வெட்டத்தக்கதன்று என்று நினைத்து, அன்றிரவு பெருமானைத் தியானித்து மரவுருக்கொண்டுள்ள நித்ய சூரியையும் 'ஸ்வாமி பெருமாளுக்குக் கட்டும் மதிள்வழியினின்றும் சிறிது ஒதுங்கியருளும்' என்று ப்ரார்த்தனை செய்து உறங்கிக் காலையில் விழித்து எழுந்து, அச்

## திருமலையில்

### தி. தி. தேவஸ்தான

# காட்டேஜ் கட்டண விவரங்கள்

| எண் | காட்டேஜ் விவரம் | கட்டணம் (நாள் ஒன்றிற்கு) |
|---|---|---|
| | டி. பி. சி. | ரூ.25/- ரூ.15/- ரூ.10/- |
| | டி. பி. சி. 3வது வரிசை (ஹீட்டர் இல்லாதது) | ரூ. 10/- |
| | ஹில் வ்யூ டீலக்ஸ் காட்டேஜ் | ரூ. 20/- |
| | ஹில் வ்யூ விருந்தினர் விடுதி | |
| | பெரியன | ரூ. 40/- |
| | சிறியன | ரூ. 20/- |
| | ஹில் வ்யூ காட்டேஜ் | ரூ. 10/- |
| | சங்கு மிட்டா காட்டேஜ் | ரூ. 20/- |
| | சேஷாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| | அஞ்சனாத்ரி காட்டேஜ் | ரூ. 20/- |
| | கருடாத்ரி நகர் காட்டேஜ் | ரூ. 20/- |
| | திருமணக் கூடம் (3வது சத்திரம) | ரூ. 15/- |
| | சிறப்பமைப்புகொண்ட காட்டேஜுகள் | ரூ. 75/- |
| | டி. சி. சி. (உள்ளே உள்ள காட்டேஜுகள்) | ரூ. 50/- |
| | **எஸ. வி. விருந்தினர் விடுதி,** | |
| | பெரிய அறைத்தொகுதிகள் | ரூ. 50/- |
| | மூலை அறைத்தொகுதிகள் | ரூ. 40/- |
| | சிறிய அறைத்தொகுதிகள் | ரூ. 35/- |
| | எச். ஆர். ஜி. காட்டேஜுகள் | ரூ. 150/- |
| | மோடிபவன் | ரூ. 100/- |
| | **திருமணக்கூடங்கள் (காட்டேஜுகள்)** | |
| | பாலாஜி காட்டேஜ் | ரூ. 500/- |
| | ரூயா காட்டேஜ் எண்: 248 | ரூ. 80/- |
| | கோகினேனி காட்டேஜ் எண்: 226 | ரூ. 80/- |
| | சி. சி. காட்டேஜ் எண்; 237 | ரூ. 100/- |
| | எஸ். எம். சி. கிழக்கு எண் : 272 | ரூ. 50/- |
| | ஏ. டி. சி. எண் : 99 | ரூ. 80/- |
| | டி. பி. (உள் பக்க காட்டேஜ்) | ரூ. 50/- |
| | டி. பி. வி. வி. சி. | ரூ. 50/- |
| | டி. பி. காட்டேஜ் (தனிச் சிறப்புக் கொண்டது) | ரூ. [illegible]/- |
| | ஏ டி. சி. மற்றும் டி. பி. சி. ஒரு அறைத் தொகுதி ஹீட்டர் உள்ளது | ரூ. 12/- |
| | ஹீட்டர் இல்லாதது | ரூ. 10/- |

செணபகமரம் மதிள் கட்டும் மார்க்கத்திலிருந்து ஒதுங்கி நிற்பதைக் கண்ட அனந்தாழ்வான் கோணலின்றி நேராகவே மதிளைக் கட்டுவித்தார். அதனால இம்மதிள் செணபக மதிள் என்று மிகவும் பிரசித்தியை அடைந்தது.

## அப்பன் அனந்தாழ்வானுக்குத் தனியன் அருளியது

பின்பொருகால், திருமலையப்பனைச் சேவிப்பதற்காகத் திருவரங்கத்திலிருந்து வாத்ஸ்ய வரதாசார்யர் முதலான சில ஸ்ரீ வைஷ்ணவர்கள் வந்து திருமலையேறும் போது மலைப் படிகளின் நீண்ட தொடர்ச்சியில் ஏறியதனால களைத்துப் பசி தாகங்களால் வருந்தும் சமயத்தில், பரம தயாளுவான திருவேங்கடநாதன் ஒரு ஸ்ரீவைஷ்ணவப்பிரமசாரியின் வேஷந் தரித்துச் சித்ரான்ந (புளியோரை) பாத்திரத்தைக் கையில் ஏந்தி எதிரே வந்து நின்று அவர்களுக்கு அப்புளியோரையைக் கொடுக்கப்புக, 'இவன் தொட்டதை நாம் உணணலாமோ கூடாதோ' என்று ஸந்தேஹப்பட்டு, 'ஓ பிரமசாரீ, நீ யாருடைய சிஷ்யன்! உன் பெயர் என்ன? இப்புளியோரை எவ்விடத்தியது? 'பத்யம் அங்குளி விச்சேத:' (தனியன் இயற்றுதல, ஏகலவ்யன் போல விரலை வெட்டிக் கொள்ளுதல) முதலாக சாஸ்திரத்தினால் அடியவனுக்கு லக்ஷணமாக விதிக்கப்பட்டு, சிஷ்யன் தினமும் அனுஸந்தானம் செய்யத்தக்கதான உனது ஆசாரியருடைய தனியன் என்ன? இவை எல்லாவற்றையும் சொல்' என்று அவர்கள் வினவ, "அடியேன் ஸ்ரீவைஷ்ணவன், திருமலையனந்தாழ்வானுடைய சிஷ்யன, மதுரகவிதாஸனென்பது அடியேன பெயராகும. ஒரு வழிப்போக்கன் வாயிலாக தேவரீர்களுடைய களைப்பைக் கேள்வியுற்ற அனந்தாழ்வான் திருவேங்கடமுடையானுக்கு அமுது செய்வித்த இப்புளியோரையை தேவரீர்களுக்காக அனுப்பினார். இதைப்

பெற்று அமுது செய்யுங்கள்' என்று கூறி, ''அகிலாத்மகுணவாஸம் அஜ்ஞாநதிமிராபஹம் | ஆச்ரிதாநாம் ஸுசரணம வநதே ऽனந்தார்ய தேசிகம் ॥ (ஆத்மாக்களுக்கு இருக்க வேணடிய நற்பணபுகள் அனைத்துக்கும் இடமாயிருப்பவரும், அறியாமையாகிய இருளை அறவே அகற்றுமவரும், தம்மைப் பற்றிய சிஷ்யர்க்கு உயர்ந்த தஞ்சமானவருமாகிய அனந்தாழ்வானென்னும ஆசாரியரை வணங்கித் துதிக்கிறேன்.) என்று ஒரு மந்திரத்தை அப்போதே இயற்றிச் சொல்லி, 'இது தான் அடியேன் தினந்தோறும் ஓதும் மநதிரமாகிய ஆசாரியர் தனியனுகும்' எனறு சொன்னன்

பின்பு அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள், 'ஓ மாணீ ஏன் இந்தத் தனியனில் உனது ஆசாரியருக்கு, பரமாசாரியரான எம்பெருமானுரோடு உள்ள ஸம்பந்தம் கூறப்படவில்லை? இதை இப்போது நீரே இயற்றினீரோ' எனறு வினவ, அவன் 'ஆரியர்காள், எமது ஆசாரியரைப் பற்றிய தனியன் இரண்டு உள்ளன. அவற்றில் ஒன்று ஆசாரியருக்கு இருக்கத்தக்க லக்ஷணங்களாகிய குணுதிசயங்களை கூறுவது. மற்றொன்று அவருக்கு ஸதாசார்யரோடு உளள தொடர்பின் பெருமையைப் பகர்வது. முதல் தனியனை முன்பு சொன்னேன. இரணடாமதையும் கேட்டருளுங்கள்' என்று சொல்லி, ''ஸ்ரீமத் ராமானுஜாசார்ய ஸ்ரீபாதாமபோருஹத்வயம, ஸதுதத மாங்க ஸந்தார்யம் அனநதாரய மஹம் பஜே ॥'' (ஸ்ரீமத்ராமானுஜாசார்யருடைய திருவடித தாமரையிணையானவரும், (அது காரணமாக) நல்லோர்களால் சென்னிக்கு அணியாகத தரிககப்படுமவருமான அனநதாழ்வானென்ற ஆசாரியரைச்சேவிககிறேன.) என்று இரணடாவதான மற்றொரு தனியனையும் நிருமித்துச் சொன்னன். பினபு அவர்கள் ஐயம் நீங்கப் பெற்றுப் பிரசாததததை வாங்கி உணணத் தொடங்க, அவர் அவர்களிடம் அனுமதி கொணடு அப்பிரமசாரி சிறிது முன்பே திரும்பி வந்துவிட்டான்.

அதன்பிறகு அந்த ஸ்ரீவைஷ்ணவர்கள் அநதப்பெருமாள பிரஸாதத்தை அமுது செய்து களைபபு நீங்கப் பெற்றவராய் மெல்ல மெலலத திருமலையேறிச் சென்று அனந்தாழ்வானை வணஙகி, ('ஸுகமாக வநது சேர்ந்தீர்களா?' என்று) அவர் நல்வரவு கூற, 'ஸ்வாமி, தேவரீர சிஷ்யனுகிய மதுரகவிதாஸனென்னும் பிரமசாரியின் கையில் தேவரீர் அனுப்பியருளிய பகவத பிரஸாதத்தை உணடு மிகவும த்ருப்தியடைந்து வழிநடந்த சிரமம் தீர்ந்து ஸுகமே வந்தோம்' என்று கூறினர்.

'மதுரகவிதாஸனென்று அடியேனுடைய சிஷ்யனுகிய பிரமசாரி இங்கு யாருமில்லை. தேவரீர்களுககு அடியேன் பகவத பிரசாதம கொடுத்தனுப்பவில்லையே. தேவரீர்கள் இங்கு எழுந்தருளும் செய்தி கூட அடியேனுக்குத் தெரியாது. இதெல்லாம் தேவரீர்களின் வழிநடந்துவந்த சிரமத்தைப் பொறுத பகவானது திருவிளையாடல்கள்' என்று அனந்தாழ்வான சொல்ல, அவர்கள் அநதப் பிரமசாரி நடுவழியில் செய்த திருவிளையாடல்கள் அனைத்தையும அவரிடம விணணப்பித்தனர்.

பின்பு அச்செய்தியைக் கேட்டு வியப்படைநத அனந்தாழ்வானுடைய கோஷ்டியிலுள்ள பெரியோர்கள அனைவரும வியந்த உள்ளத்தினராய, 'திருவேங்கடமுடையான அனந்தாழவானுடைய ஸதாசார்ய லக்ஷண பூர்த்தியையும் ஆசாரய (= ஸ்ரீராமாநுஜ) ஸம்பநதத்தின் பெருமையையும் தானே சொல்லி அவருக்குச் சிஷ்யனுயிருக்கும் தன்மையைத் தாங்கி, அவரிடத்தில் தனககு மிகவுயர்ந்த அபிமானமுள்ள தென்பதை மககளனைவர்ககும் அறிவிக்கிறுன். இது மிகவும்ஆச்சரியம்.

திருவேங்கடவன் தன்னை அனந்தாழ்வானுடைய சிஷ்யனுக நினைத்ததற்குக் காரணம் என்னவென்றுல்-தனக்குச் சங்குசக்கரங்களை அளித்த ராமாநுஜமுனிவா அனந்தாழ்வானுக்கு ஆசாரயராகையாலும, ஆதிசேஷனது அம்சமான இவ்வனந்தாழ்வானுக்கு அம்சியான பகவத்ராமாநுஜ முனிவரோடுள்ள ஒற்றுமையாலும், 'ஸ்ரீமத்ராமாநுஜாசார்ய ஸ்ரீபாதாம்போருஹத்வயம' என்று அனந்தாழ்வானை ராமாநுஜருடைய திருவடித் தாமரையாகக கூறும் வாயிலாக ராமானுஜருடைய அம்சமாக (பெருமான) தானே பிரசித்தமாககியதனுலும், ராமானுஜரை ஆசார்யராக நினைத்ததறகுப் பரிவாஹரூபமாக - (கலுங்கலின் உருவமாக; பயனுக) அனந்தாழ்வானுடைய ஆசாரயத்வத்தை நினைத்தமையே அதற்குக் காரணமாகத் தக்கது என்று நிச்சயித்து, அதனுல அனநதாழ்வான் திறததில அதிகமான கௌரவத்தை வகித்தவர்களாய், 'இது முதற்கொண்டு திருவேங்கடத்தெம் பெருமான பரமப்ரீதியோடு இயற்றியருளிய இவ்விரணடு மந்திரங்கள்தான் அனந்தாழ்வானுடைய சிஷ்யர்களால் ஆசாரியர் தனியன்களாக மிகவும் ஆதரிககத்தக்கவையென்றும், முதலியாண்டான் கூரத்தாழ்வான் முதலியோரிடம இராமாநுச முனிவரின் திரிதண்டம் (முக்கோல்) பாதுகை ஜலபவித்திரம் (முக்கோலின நுனியில் கட்டப்படும வெள்ளைத் துணிப்பை) முதலாகுந் தனமை போனறு வேஙகடததானுடைய வாக்கியததில் நம்பிககையினுல் அனநதாழ்வானிடம் இராமாச முனிவரின திருவடித் தாமரையாந் தன்மையும தவருமல் அனைவராலும் அனுஸந்திககத்தகக தென்று ஒரு நியதியை ஏற்படுத்தினர்.

(தொடரும)

# தி. தி. தேவஸ்தான சமய நூல்கள்

## தமிழ்

| | | ரூ. பை. |
|---|---|---|
| அன்னமய்யா ஓர் அறிமுகம | ... | 1–00 |
| பகவத் சந்தேஸம் | ... | 0–50 |
| இந்து சமயக் கையேடு | ... | 1–50 |
| ஹனுமான் | ... | 0–50 |
| கணணன் பேசுகிருன் | ... | 0–50 |
| மாங்கல்ய விருத்தி ஸ்தோத்திரம் | ... | 0–10 |
| சித்திர சுப்ரபாதம் | ... | 8–00 |
| ஸ்ரீவேங்கடேஸ்வர சுப்ரபாதம் (பொருளுடன்) | ... | 0–50 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | ... | 0–15 |
| சித்தாந்த சங்கரஹம் | ... | 2–50 |
| திருவேங்கட கலசம் | ... | 0–15 |
| சித்திரத் திருப்பாவை | ... | 8–25 |
| ஏழுமலை யாத்திரை | ... | 0–75 |
| ஹனுமன் கதை | ... | 2–00 |
| திருமலை வழி காட்டி | ... | 0–10 |
| ஸ்ரீ வேங்கடேஸ்வரா கல்யாணம் | ... | 11–50 |
| கண்ணன் கதை | ... | 2–00 |
| நித்யாநுஸந்தானம் (வடகலை) | ... | 4–00 |
| நித்யாநுஸந்தானம் (தென்கலை) | ... | 4–50 |
| அபிமன்யு | ... | 2–00 |
| கிருஷ்ணனும் நரகாசுரனும் | ... | 2–00 |
| பகவத் கீதை | ... | 2–00 |

## ஆங்கிலம்

| | | Rs. Ps. |
|---|---|---|
| Administration of Temples | . | 5—00 |
| Alamel Mangapura | | 0—25 |
| Ekantaseva | . | 5—00 |
| Govinda brochure | . | 3—00 |
| History of Tirupati Vol· II | . | 15—00 |
| Melodies of staff notation | . | 10—00 |
| Lord Venkateswara & Alwars | . | 1—00 |
| Acharya Hridayam | | 8—25 |
| Theory of Knowledge | | 5—00 |
| Tirupati Sri Venkateswara | .. | 40—00 |
| S V Suprabhatham with meaning | . | 0—50 |
| Heart of Bhagavatham | . | 3—00 |
| S V Sachitra Suprabhatham | .. | 11—00 |
| Tirumala Temple | .. | 80—00 |
| Pilgrimage to Uttarakhanda | | 3—75 |
| Tiruppavai | . | 10—00 |
| Vision of Aryan Glory | .. | 1—50 |
| Uddavageetha | . | 5—00 |
| The Wise Minister & other stories | . | 1—00 |
| Sree Venkateswara | | 1—00 |
| Vishnu Sahasranamam 999 (Namams) | . | 1—00 |
| Harischandra | .. | 1—00 |
| Kardama & Devahuti | . | 1—00 |
| Maharshi Valmiki | | 2—00 |
| Druva | . | 2—00 |
| Bhishma | .. | 2—00 |
| Vedavyasa | . | 2—00 |
| Tenali Ramakrishna | .. | 2—00 |
| Ganesha | .. | 2—00 |
| Thyagaraja | .. | 2—00 |
| Drowpadi | . | 2—00 |
| Bhageerada | . | 2—00 |
| Prahlada | | 2—00 |
| Andal | | 2—00 |
| Kalidasa | .. | 2—00 |
| Vadiraja | . | 2—00 |
| Pillai Lokacharya | , | 2—00 |
| Dhadhichi | , | 2—00 |
| Nachikata | . | 2—00 |
| Namadeva | . | 2—00 |
| Garuda | . | 2—00 |
| Ramanujacharya | .. | 2—00 |
| Narada | | 2—00 |
| Vedantadesikaru | .. | 2—00 |
| Why am I Hindu? | .. | 1—50 |
| Purushasuktham | | 2—00 |
| History of Tirupati Vol I | .. | 15—00 |
| Homage to Kalankari | .. | 120—00 |
| Yoga & Yoga | . | 2—00 |
| Viswamithrudu | | 2—00 |
| Idle child | | 0—05 |

## வடமொழி

| | | ரூ. பை. |
|---|---|---|
| எஸ். வி. அஷ்டோதரம் | .. | 0–62 |
| எஸ. வி. சுப்ரபாதம் | .. | 0–12 |
| தத்வ ஸங்க்யானம் | .. | 2–00 |

குறிப்பு : பிரதிகளுக்கு ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி:

**THE WELFARE OFFICER**
Publication Wing (Administrative Building)
T T D TIRUPATI

# ◦ கோதை தமிழ் ஐயைந்தும் ஐந்தும் ◦


திரு. கே. எஸ். கிருஷ்ணன் எம்.ஏ.,
திருநெல்வேலி டவுன்.


வேத மனைத்துக்கும் வித்தாகும் என்று ஆன்ரேரால் பாராட்டப்பட்டிருக்கும் திருப்பாவை உபநிடதம், அருளிச் செயல் இவைகளின் சாரமாகத் திகழ்கின்றது. இலக்கிய நோக்கில் இந்த அழகிய நூலைப் பார்த்தோமானல் இது மிகவும் எளிய இனிய சொற்களால் ஆக்கப்பட்டு, பொருள் செரிந்து நகைச்சுவைமிகுந்து, பாசுரங்களில் காணப்படும் உரையாடல்களில் நாடகப்பாங்கு மலிந்து அமைந்திருக்கின்றது. அயோ நிஜையாய் அவதரித்து, அந்தணர் குலத்தில் வளர்ந்த திருவாணடாள் நாச்சியார் ஆய்ச்சியர் பேச்சில் பாடியிருக்கும் செய்யுட்கள் இசை நயத்துடன் பாடக்கூடியவையாகவும் இருக்கின்றன. சிற்றஞ்சிறு காலையில் மிகுந்த குதூலகத்துடன் மெல்லணையிலிருந்து எழுந்திருந்து, கிளி மொழியும் மயிற்சாயலும் அன்ன நடையும் உடைய மெல்லியலார் இன்னும் உறக்கத்திலிருக்கும் தங்களுடைய தோழிகளை எழுப்பிக் கொண்டு கண்ண பெருமான் திருக்கோயிலுக்குச் செல்லுவதாக அமைந்திருக்கும் அருள் மொழி படிக்கப் படிக்க இனிமையாக இருக்கின்றது.

திருப்பாவை வேத மனைத்துக்கும் வித்தாகும் என்ற உண்மையை நிரூபிப்பதற்காக இக்கட்டுரை வரையப்படுகிறது. वेदैश्च सर्वै रह मेव वेद्यः வேதங்கள் எல்லாவற்றுலும் பரம் பொருளாகிற நானே அறியப்பட வேண்டியவன் என்று கணணபிரான் அருச்சுனனுக்குக் கீதை உபதேசிக்கும்போது அருளிச் செய்திருக்கிறன். ஆதி பகவனுன ஸ்ரீமந் நாராயணனே பரம்பொருள் என்பது எல்லா வேதங்களும் அறுதியிடுவதென்று ஸ்ரீவைஷ்ணவர்கள் கொள்ளுகின்றமையாலும், பிறவித்தளையைக் களைவதற்கு எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளைச் சரணடைவதே வழி என்று கொள்ளுகின்றமையாலும் திருப்பாவையை அவர்கள் நித்திய பாராயணமாக கொண்டுள்ளார்கள். இந்த இரணடு தத்துவங்களும், பரமாத்மாவுக்கு ஜீவாத்மா இங்கும், அங்கும், எங்கும், எப்போதும் அடிமையென்ற உணமையும் மிகத் தெளிவாக திருப்பாவையில் கூறப்பட்டிருக்கின்றது.

ஸ்ரீ வைஷ்ணவர்கள் திருமந்திரம், துவயம், சரமச் சுலோகம் என்ற மூன்றையும் தினந்தோறும் அனுசந்திக்க வேண்டும் என்று ஆன்ரேர்கள் பணித்திருக்கிறர்கள். திருமந்திரம் என்பது 'ஓம் நமோ நாராயணய' என்ற பரம்பொருளை நிரூபிக்கும் திருவெட்டெழுத்து. அந்தத் திருமநதிரத்தை அதிகாலையில் ஓத வேணுமென்பதை ஆண்டாள் திருப்பாவை முதற் பாசுரத்தில் விதந்தோதுகிருள்;

> சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச்சிறுமீர்
> காள்
> நாராயணனே நமககே பறை தருவான்
> பாரோர் புகழப்பணிந்தேலோ ரெம்
> பாவாய்.

எம்பெருமான் ஒருவனே புருடோத்தமன். स्त्रीप्राय इतरत् सर्वं என்பதிறகிணங்க ஜீவாத்மாக்கள் அனைத்தும் பெண்கள் எனபதை மனதிற் கொணடு சீர்மல்கும் ஆய்ப்பாடிச் செல்வச் சிறுமீர்காள் என்று ஜீவாத்துமாக்கள் எல்லோரையும் எம்பெருமானை வழிபடுவதற்காக அழைத்துச் செல்லுகிருர்கள்.

नारायण: परंब्रह्म तत्त्वं नारायण: पर: நாராயணனே பரப்பிரம்மம், நாராயணனே பரதத்துவம் என்ற புருஷ ஸூக்த மந்திரத்தின் பொருளை உள்ளடக்கி நாராயணனே பறை தருவான் என்று ஏகாரத் தேற்றங் கொடுத்து நாராயணன் என்ற சொல்லை இந்தப் பாசுரத்தில் ஆணடாள் அமைத்திருக்கிருள். मामेव ये प्रपद्यन्ते मायां एतां तरन्ति ते - என்னெருவனையே எவர்கள் வழிபடுகிருர்களோ அவர்கள்தான் பிறவியென்ற இநத மாயையைத் தாண்டுகிருர்கள் என்று கீதையில் கண்ணன் சொன்னதை நமக்கு நினைவுபடுத்தி ஆண்டாள் நமக்கே – அவனை வழிபடும் நமக்கே என்று ஏகாரத் தேற்றம் கொடுத்து அமைத்திருக்கிருள். ஆகவே, நாராயணனே நமக்கே என்ற பதங்கள் எவ்வாறு வேதப் பொருளை வடித்துக் கொடுத்துள்ளன என்பது எடுத்துக் காட்டப்பட்டது;

பெண்களெல்லோரும் தோழிமாரை எழுப்பி அழைத்துக் கொண்டு நந்தகோபன் திருமாளிகைக்குச் சென்று, கண்ணனையும் நப்பின்னைப் பிராட்டியையும் துயிலெழுப்பி அவர்களுடைய அருளை வேணடுகிருர்கள்;

> செப்பமுடையாய், திறலுடையாய்,
> செற்றூர்க்கு
> வெபபம் கொடுககும் விமலாதுயி
> லெழாய!
> செப்பன்ன மென்முலைச் செவவாய்
> சிறுமருங்கில
> நபபின்னை நங்காய் திருவேதுயி
> லெழாய்
> உக்கமும் தட்டொளியும தநதுன்
> மணளனை
> இப்போதே எம்மை நீராட்டேலோ
> ரெம்பாவாய்.

அதாவது, உயர்வறவுயர் நலமுடைய எம்பெருமானே, அசித்துக்கள்போல்

அறிவிழந்து மாயவலையுள் அகப்பட்டிருக்கும் ஆன்மாக்களை பகதி ப்ரபத்திகளின் அறிவைப் பெறச் செய்து அருள் பாலிக்கும் பரமபொருளே எங்களைக் கடாட்சிக்க வேண்டும். அன்பும் அருள் மொழியும் இரககமும் உடைய நப்பின்னை நங்காய், திருவே, எங்களைக் கடாட்சித்து, தேவரீர் அடியேங்களுக்கு ஞான வைராக்கியஙகளைக் கொடுத்து எம் பெருமானுடன் ஒன்றும்படி அருள் புரிய வேண்டும் எனறு வணங்குகிறாகள்.

இந்தப் பாசுரம் த்வயத்தின் பொருளை உணர்த்துகிறது. श्रीमन्नारायण चरणौ शरणं प्रपद्ये, श्रीमते नारायणाय नमः । ஸ்ரீமானுடைய - திருமகளார் தனிக்கேள்வனை நாராயணனுடைய திருவடிக்கீழ் சரண மடைகிறேன், திருமகள் செல்வனை நாராயணனை வணங்குகின்றேன் என் பதுத்வயமும் அதனுடைய பொருளும். அதாவது தனியாக நாராயணனை வணங்குகிறதில்லை. இலக்குமிசமேதனை ஸ்ரீமந் நாராயணனை வணங்குவதுதான் பெரும்பேறு என்று பொருள். அதை விளக்கும் நோக்கமாக — விமலா துயிலெழாய், இப்போதே எம்மை நீராட்டேலோ என்று ஆண்டாள் நாச்சியார் அருளிச் செய்திருக்கிறாள்.

கண்ணனெனும் பெருமான் நப்பின்னைப் பிராட்டியுடன் சீரிய சிங்காதனத்திருநது வந்தவர்களுக்கு ஆடையாபரணங்கள் அளித்து அன்புடன் அருள்புரிய, இவர்கள் அவைகளை அணிநது கொணடு, பால்சோறு மூட நெய்பெய்து முழங்கை வழிவாரக் கூடியிருநது அவர்களுக்கு நிவேதனம் செய்து தாங்களும் உண்டு மகிழுகின்றார்கள. அவர்களுடைய ஸம்ஸார தாபம தணிகின்றது. அகமும் புறமும் குளிர்நதவர்களாய் ஆனந்தமடைகிறார்கள்.

இந்தப் பாசுரம் உபநிடதம் பிரம சூத்திரம், பகவத் கீதை முதலிய நூல்களின் தேர்ந்த பொருளை அடககியுள்ளது. தைத்தரிய உபநிடத்தில் ஜீவாத்ம பரமாத்ம ஸம்பநதத்தை — सोऽश्नुते सर्वान् कामान् सह ब्रह्मणा विपश्चिता - அந்த ஜீவாத்மா முத்திநிலையில் வாலறிவனை பரமாத்மாவுடன்கூட எல்லா இன்பங்களையும் நுகருகின்றது என்று கூறுகின்றது. இன்னொரு வாக்கியம் परमं साम्यं उपैति - பரமாத்மாவுக்குச் சமமான நிலையை யடைகினறது என்று உரைக்கின்றது. பகவானும் கீதையில், मम साधर्म्यं मागताः सर्गेऽपि नोप जायन्ते- என்னுடன ஸமமான நிலையை யடைந்தவாகளாய் மீண்டும் சிருஷ்டியில் பிறப்பதில்லை என்றுகூறி

ஜீவாத்ம பரமாத்மாவின் ஐக்கியத்தை - அத்வைதத்தை - ஒப்புக் கொள்ளுவதாகத் தெரியவில்லை. பிரம சூத்திரமும், भोगमात्रसाम्यलिंगाच्च, जगद्व्यापारवर्ज என்று பணித்து ஸாம்யத்தைததான் சொல்லுகின்றது. அதாவது, முத்தி இன்பத்தை நுகர்வதில் ஜீவாத்மா பரமாத்மாவுடன் சம நிலையை யடைகின்றது என்றும், உலக வியாபாரமான ஆக்கல் அழித்தல் அளித்தல் தொழில்களில் ஜீவாத்துமாவுககுச் சம்பந்தமில்லையென்றும வறபுறுத்கின்றது.

மேலும் தைத்தரியத்தில், अहं अन्नम् अहं अन्नं अहं अन्नं, अहं अन्नादः, अहं अन्नादः, अहं अन्नादः - நான் அன்னம், நான் அன்னம, நான் அன்னம், நான் அன்னத்தை அருந்துகிறேன் நான் அருந்துகிறன், நான் அருந்துகிறேன் என்று ஜீவாத்மா மாறி மாறிச் சொல்லி இன்புற்றிருக்கின்றது என்று கூறியுள்ளது. அதாவது, ஜீவாத்மாவின் பக்தியை எம்பெருமான் அனுபவிக்கிறான். பரமாத்மாவின் அருளமுதை ஜீவாத்மா அனுபவிக்கிறான் என்பது பொருள். அந்தக் கருத்தை உள்ளடக்கி, பால் சோறு மூட நெய் பெய்து கூடியிருந்து குளிர்ந்து என்று நாச்சியார் அருளிச் செய்திருக்கிறார்.

இவ்வாறு பரஸபரம் குணனுபவம் பண்ணிக் கொணடிருக்கும் போது, ஆண்டாள் முதலிய பெணகள அறியாத பிள்ளைகளோம், அன்பினுல், உன்னைச் சிறு பேரழைத்தனவும் சீறியருளாதே, இறைவா நீ தாராய் பறை'யென்று வேண்டுகிறுர்கள்.

இவ்வாறு ஆண்டாள் மன்னிப்புக் கேட்பது மழலைச் சொல்லினுல் குழந்தைகள் பெற்றேர்களை யழைப்பது போன்றது என்பதை நமக்கு நினைவுறுத்துகின்றது. விசுவ ரூபத்தைத் தரிசித்த அருச்சுனன், அன்பினுலும், உறவினுலும் நான் உன்னுடன நெருங்கிப் பழகி, இதுகாறும் உன்னை அழைத்துள்ள பேர்களைப் பொருத்தருள வேண்டும் என்று கேட்டதையும் நினைவுறுத்துகின்றது.

இந்த இடத்தில் உபநிடத வாககியம் ஒன்று நினைவுக்கு வருகின்றது. एतत्साम गायन्नास्ते। இந்த ஸாமத்தை ஓதிக்கொண்டு முக்தன் இருக்கிறுன் என்பது அந்த வாக்கியம். அந்த ஸாமம் எம்பெருமானுடைய பெருமை முழுவதையும் பேசமுடியுமா என்ருல், அதுதானில்லை. यतो वाचो निवर्तन्ते अप्राप्य मनसा सह। அந்தப் பரம்பொருளிலிருந்து வார்த்தைகள் திரும்புகின்றன. மனதும் கூட எட்ட முடியாமல் திரும்புகின்றது என்று வேதமே கூறுகின்றது. ஆயினும் வேதங்கள் முடிந்த மட்டும் அவனுடைய பெருமைகளைப் புகழ்ந்த வணணமிருக்கின்றன. அதே போல நாங்களும் உன்னை வாழ்த்துகின்ரேம். இங்குக் கம்பனுடைய ஆசையும் நமது நினைவுககு வருகின்றது. ஒரு பூனை பாற்கடல் முழுவதையும் குடிக்க முயல்வது போல நான் காசில் கொற்றத்தி ராமன் குணதிசயங்களை ஆசை பற்றி யரையலுற்றேன் என்று இராம காதையைக் கமபன பாடத் தொடங்குகிறுன்.

அடுத்த பாசுரத்தில் பெண்கள் அவர்களுடைய விருப்பத்தை விண்ணப்பம் செய்கிறுர்கள்.

# கலியுறையும் மா மலையப்பன்

திரு. வி. ஆர் சீனிவாசராகவன், சென்னை

வேத மனைத்தும் விரிநீர் புகுந்திட மேனிதனில்
பாதியை மீனுரு வாக்கி யவைதமை மீட்டெழுந்த
நாதன் கதிதா னருளும் அவனின் இனியநாமம்
கீதமா யோங்கி யொலித்திடக் காணலாம் வேங்கடத்தே.

களிப்பின் அமுதம் கடையக் கடலினுள் வைத்தமலை
ஒளிய பெருவா மையுரு வெடுத்து நிறுத்தியவோர்
விளியி யலாத முகிலனின் தன்னொளிர் சங்கமது
வளியி னிடையி லொலித்திடக் காணலாம் வேஙகடத்தே.

மண்ணிது மாநீர் புகுநத பொழுதி லரியழித்து
கணகள் வனையா கருவுரு வாக வெழுந்துகோட்டில்
அணட மெடுத்த வமலனி னச்சம் பழிதிகிரி
ஒண்சுட ராகச் சுழன்றிடக் காணலாம் வேங்கடத்தே.

சொல்லித் துவளா துயர்கள் சிறுவனைச் சேர்த்துவநத
புலை னுடலைக் கிழிக்கப பெருங்காற் புகுந்தெழுந்த
வல்லரி தன்றன் வளவழி காட்டும் வலக்கையது
ஒல்கா நிலையா யிருந்திடக் காணலாம் வேங்கடத்தே.

அசுரா திபன்முன் சிறுவுரு வாயடி நாடியபின்
விசும்பி லுயர்நத உருவா யவனை யளந்துபாரின்
பசுக்கள் வளர்க்கும் பவளனின பக்க லழைபணிக்கை.
தசும்பு நிகர்த்து மிளிர்ந்திடக் காணலாம் வேஙகடத்தே.

முற்றைத் தகப்பன் மொழியை மடுத்து முனிவனுக
விற்கை குலத்தோர் வெருணடிடச் செய்து புவியிதனுள்
பற்றை யறுக்கும் பரமனின் பொற்கழற் பாதமொரு
பொற்ரு மரையாய்ப் பொலிநதிடக் காணலாம் வேங்கடத்தே.

பத்து சிரத்தோன் இலங்கை யரக்கன் அழிந்தொழிய
சித்தமாய் ஞால மிதனுள் மனித உருவமான
வித்து உயிாகளைக் காக்கும் விமலனின் கணபொலிவு
நித்தமும் பொழிலாய்க் குளிர்ந்திடக காணலாம் வேங்கடத்தே.

முன்னே பிறந்து முகில்நிற மாமணிக் கணணனேடு
வன்ன சுரர்கள் அழித்த வலியி னுருவமவன்
இன்துணை மங்கை இருமஅணி மார்பு இகமிதனின்
பொன்னணி யாக ஒளிர்ந்திடக் காணலாம் வேங்கடத்தே.

உலகம் முழுதும சிறுவா யிடையி லடக்கியாயா
குலத்தி லுதித்து அரக்கி யுயிரைக் குடித்தவளை
விலக்கிய வண்ணன அமுத வைனின் பவளவாயிந்
நிலமிடை தங்கி யருளிடக் காணலாம் வேங்கடத்தை.

நலிந்திடும பாரிது நறகரு மங்கள் விடுத்ததுகண்
மலிந்திடும் மாப்பிணி மாந்தர் மனத்தி லிருந்தழிந்து
மெலிந்திடத் தோன்றுமோா வணணம் மரகத மேனியோடு
கலியுறை மாமலை யப்பனைக் காணலாம் வேங்கடத்தே.

சிற்றஞ்சிறு காலே வந்துன்னைச்
சேவித்துன்
பொற்றாமரையடியே போற்றும்
பொருள் கேளாய்
பெற்றம் மேய்த்துண்ணும் குலத்தில்
பிறந்து
குற்றவேவல் எங்களைக் கொள்ளாமல
போகாது
இற்றைப பறைகொள்வானன்று காண்
கோவிந்தா
இற்றைக்கும ஏழேழ் பிறவிக்கும
உந்தன்னோடு
உற்றோமே யாவோம் உமக்கே நாமாட்
செய்வோம்
மற்றை நம் காமங்கள மாற்றேலோ
ரெம்பாவாய்.

எம்பெருமானை எழுப்பித் தங்களுடைய ஸ்வரூபத்தை விண்ணப்பித்துக் கொள்ளுகிறார்கள்: 'நீ எங்களை உன்னுடைய கைங்கர்யத்தில் ஈடுபடுத்திக் கொள்ள வேண்டும். ஏழேழ் பிறவிக்கும் உற்றோமாய் உனக்கே நாங்கள் ஆட்செய்ய வேண்டும்' என்று வேண்டிக் கொள்ளுகிறார்கள்.

मां एकं शरणं व्रज - என்னைச் சரணடைவாயாக என்று கண்ணன் அருளிச் செய்ததை அவனிடமே விண்ணப்பித்து, அவனிட்ட கட்டளையின்படி தாங்கள் நடப்பதாக அவனிடம் உறுதியளித்து, அவனுக்கே யாட் செய்யக் காத்திருப்பதை அவனிடம் அறிவிக்கிறார்கள். நான் எனும் செருக்கறுத்து, எம்பெருமானையே உபாயமாகப் பற்ற வேணும் என்ற ஸ்ரீ வைஷ்ண சித்தாந்தத்தை இந்தப் பாசுரத்தில் ஆண்டாள் அறிவுறுத்துகிறாள்.

எம்பெருமானே உபாயோபேயம் என்பதையும் அவனுக்குகந்த கைங்கர்யமே சேதனனுக்குப் புருஷார்த்தம் என்பதையும் நம்மாழ்வார் திருவேங்கடமுடையான் விஷயமான பாசுரத்தில் அருளிச் செய்கிறார்.

ஒழிவில காலமெல்லாம் உடனாய்
மன்னி
வழுவிலாவடிமை செய்ய வேண்டும்,
நாம்
தெழிகுரலருவித் திருவேங்கடத்து,
எழில் கொள்சோதி எந்தை தந்தை
தந்தைக்கே.

கைங்கர்யமே புருஷார்த்தம் என்பதை வான்மீகி இளைய பெருமாள் வாயிலாகக் கூறுகிறார்.

भवांस्तु सह वैदेह्या गिरिसानुषु रंस्यसे ।
अहं सर्वं करिष्यामि जाग्रतः स्वपतश्च ते ।

சக்கிரவர்த்தித் திருமகனிடம் இலக்குவன் வனத்திற்குப் புறப்படுவதற்கு முன் விணணப்பம் செய்கிறான்: 'தேவரீரும் பிராட்டியும் மலைத் தாழ்வரைகளில் சுகமாக வாசம் செய்யுங்கள், நீங்கள் உறங்கும் போதும் விழித்திருக்கும் போதும் அடியேன் எல்லாக் கைங்கர்யங்களையும் செய்கிறேன்'.

இவ்வாறான கருத்துக் கிணங்க ஆண்டாளும், உமக்குற்றோமே யாவோம் உமக்கே நாம் ஆட்செய்வோம் என்று பணித்தார். இந்த இடத்தில் வேத மந்திரம் ஒன்று நம் நினைவுக்கு வருகின்றது. तद् विष्णोः परमं पदं सदा पश्यन्ति सूरयः । என்பது அந்த வாக்கியம். அதாவது விஷ்ணுவினுடைய பரமபதம். அங்கு நித்திய சூரிகள் எப்போதும் கண்ணுங்கருத்துமாகப் பார்த்த வணணம் இருக்கிறார்கள். எம்பெருமானுடைய எழில் மிக்க திருமேனியைப் பார்த்த வண்ணம் இருக்கிறார்கள் என்பது ஒரு கருத்து. மற்றொரு முக்கியமான கருத்து யாதெனில், அவனுடைய குற்றேவல்களை உடனுக்குடனே நிறைவேற்றுவதற்காக அவனுடைய திருமுக மண்டலத்தைப் பார்த்த வணணம் இருக்கிறார்கள் என்பது.

ஆகவே, வேத மனைத்துக்கும் வித்தாகும் என்று பாராட்டப்படும் திருப்பாவை ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு நித்திய பாராயணப் பிரபந்தமாகத் திகழ்கின்றது.

✶

## திவ்விய மங்கள விக்கிரகம்

வைணவக் கொள்கைபடி, திருமாலின் உருவம் 'திவ்விய மங்கள விக்கிரகம்' என்றழைக்கப்படும். இந்த உருவம் ஐந்து வகையில் இருப்புநிலை கொள்ளும். அவை பரத்துவநிலை, வியூக நிலை, விபவநிலை, அர்ச்சைநிலை, அந்தரியாமித்துவம் ஆகும்.

1. **பரத்துவ நிலை** என்பது காலத்திற்கப்பாலாய்ப் பெருங்களிப்புடன் நித்திய சூரிகளுடன் வைகுநதத்தில்இருக்கும் இறைவன் நிலையாகும்.

2. **வியூக நிலை** என்பது பரவாசுதேவன் இந்த உலகத்தில் முத்தொழில் புரியவும் அடியவர்களுக்குப் பேரருளைச் சுரப்பதற்ககாக வாசுதேவன், சங்கருடணன், பிரத்தியும்நன், அநிருத்தன் என்ற திருநாமங்களுடன் வடிவந்தாங்கும நிலையாகும்.

3. **விபவ நிலை** என்பது ஞானியர்க்குத் தியானப் பொருளாய் அலங்காரததுடன் பெரிய பிராட்டியுடன் ஒவ்வொருவர் இதயத்திலும் எருநதருளியிருககும் நிலையாகும்.

4. **அர்ச்சை நிலை** என்பது தன அடியவர்களுக்கு உகந்த திருவுருவம் எதுவோ, அதனையே உவப்பான வடிவமாகக் கொள்ளும் நிலையாகும்.

5. **அந்தரியாமித்துவம்** என்பது மனதிலிருககும் கடவுள் நிலையாகும். எளியவர்களுக்குப் பரத்துவமோ, வியூகமோ, விபவமோ, அந்தரியாமித்துவமோ எளிதில் கண்ணால் கணடுணர வாய்க்காது. இறைவனே எளிமைக் கலியாண குணத்துடன் எழுந்தருளும் அர்ச்சை நிலையே எல்லோர்க்கும் கிட்டும்.

சீர்காழி. எஸ். குமார்

# வைணவ வினா - விடை

விதவான் ஸ்ரீ. உ. வே. தஞ்சை என். எஸ். தாதாசார்யா.

**வேதங்களின உரை பற்றிய விளககம் எனன?**

''உரை'' என்ற சொல்லுக்கு சொல், சொற் பொருள், அறிவுரை, பழிப்பு, நூல், பொன், புகழ், மாற்று என எட்டுப் பொருள்கள். உரை என்பதை சம்ஸ்கிருதத்தில் ''வியாக்கியானம்'' என்பார்கள். கூரை இல்லாத வீடும், உரை இல்லாத நூலும் ஒன் றே. ஆலய விமானத்தின் உச்சிக்கலசம் போல், ஒரு நூலுக்கு உரை சிறப்பைத்தரும். உரையைக கொண்டே நூலின் மதிப்பு ஓஙகும். நூலாசரியரை விட, உரையாசிரியர்களே பெருமபுலவர்களாகவும, ரசிகர்களாகவும் இருக்கவேணடும். கவி இதயம காணும் நுணணறிவு படைத்தவாகளாகவும் இருக்க வேணடும். கடலில் முததுக் குளிபபது போல், நூல் களில் ஆழ்ந்துள்ள முததான கருத்துக்களை, உரை யாசிரியாகள் ஆய்நது எடுப்பாாகள். அவைகளை மககள் மனம் என்ற பேழையில் இடுவார்கள். தெய்வ நூல்களான திவ்வியப் பிரபந்தங்களின் சிறப்பெல லாம் அவைகளுக்கிட்ட 'ஈடு' எனற உரையால்தான ஏறபட்டது. பிரம்ம சூததிரத்திறகு ஸ்ரீமத பாஷ்யம யாத்தவர்களால் மற்றும் நச்சினாக்கினியர், சேனா வரையர், அடியார்க்குநல்லார், பரிமேலழகா என்ற உரையாசிரியாகளும் நூலின பெருமையை ஓங்கச செய்தனர். "10 பவுன் மதிபபுளள நூலுக்கு 50 பவுன் மதிப்புள்ள முகவுரை, உள்ளுரை, மதிப்புரை அமைய எழுத வேண்டும'' எனப் பொனுட்ஷா கூறி னார். இவ்வகையில் வேதஙகளுக்கு ஸ்ரீவித்யாரணயர் ஸ்ரீசாயணமாதவர் என்ற இருவரும பாஷ்யம அரு மையாக எழுதியுள்ளனர். பாஷ்யம் என்றால் புனித மான உரை எனப்பொருள். ஆவருததி, அத்யாஹா ரம, அநுவருத்தி முதலிய சாஸதிரக் கோட்பாடுகளு டன் மூலசூத்திரத்திற்குக கொளகை பிறழாமல நட் புடன எழுதுவதே பாஷ்யமாகும.

'' ஸூத்ரார்த்தோ வாண்யதே யத்ர பதே
ஸூத்ரானுஸாரதஃ।
ஸ்வபதானி ச வாண்யந்தே பாஷ்யம
பாஷ்ய விதோ விது:॥

என்பது பாஷ்ய இலக்கணமாகும. வேதங்களின் கிளைப் பிரிவுகள் அளவற்றன. கல்பந்தோறும் பிரமன் நேரிடையாகவும, மகானகளின மூலமாகவும், முன் பிருநதபடியே மறுபடியும் அறநூல்களை வெளியிடு கிறா எனபது வைதிகர்களின் கருத்து. அப்படி வெளியிடும பொழுது கல்பததிற்கு ஏற்றாற்போல் நூல்களில் சில குறையற்ற மாறுபாடுகள் இருக்கும இது ஒரு குறையாக ஆகாது. கல்பம் என்றால் ஒரு பிரளயததிற்கு முன்னும் பின்னுமுள்ள காலவரம்பாகும். ஸ்ரீவைகுண்டம தவிர்த்த இந்தப் பிரமாணடம முழுவதும அப்பொழுது நீரில் மூழகி விடுவதே மஹாப்பிரளயமாகும. ''இந்த மஹாப் பிரளயததில் வரபலம் பெற்ற மார்க்கண்டருடன், பகவான் நம திருவேங்கடவள்ளல் ஆலிலைப்பாலக னாய்ப் படுததிருபபா. பலகல்பங்களுக்கு முனபு இருந்த நம பழைய நன்னூல்களைக கணக்கிட்டுள் ளார்கள் அவை பின்வருமாறு: வேதங்கள் 4 லக்ஷம கிரந்தங்கள் கொண்டவை. கிரந்தம என்றால 32 எழுத் துக்கள அடங்கியவைசமையல்=2 லக்ஷங்கள். காம நூல் கள=1 லக்ஷம். நாட்டியம்=32 லக்ஷங்கள். சில் பம=ஒரு அற்புதம (அற்புதம் எனறால 10 ஆயிரம் கோடி) ஆகமங்கள்=14 லக்ஷங்கள. ஆயுர்வேதம்=3 லக்ஷங்கள், ஜோதிஷம்=4 லக்ஷங்கள்.

'' லக்ஷம் து சதுரோ வேதா: த்விலக்ஷம்
ஸூப சாஸத்ரகம।
ஷோடசம மானினி சாஸத்ரம தவாத்ரிம்சத்
பரதம ததா॥
அறபுதம சிலபசாஸத்ரம து ஆகம்மது சதுாதச।
ஆயுர்வேதம் த்ரிலக்ஷம து சதுர் லக்ஷம து ஜோதிஷம॥

எனற ஒரு ப்ரமாணச் செயயுள் இக்கருத்தை வெளி யிட்டது இவவளவு எணணிககையுளள அறிவுக களஞ்சியமான நூலகள் இன்று எவவளவு குறைந்தன எனபதை நினைககும் பொழுது தேச உணர்சசி உளள இந்துக்கள் யார்தான் வேதனைபபடாமல் இருப்பா. ஈணடு கல்பம் எனபது பற்றிச் சிறிது நாம அறிய வேணடியது முக்கியம். கால அளவுக்கும் கலபம எனபெயா. நமக்கு ஒரு வருஷம் தேவர்களுக்கு ஒரு நாள. இவ்வாறு தேவாகளின இரணடாயிரம் யுகங்கள் பிர்மாவுககு ஒரு பகல் என ஏகாக்ஷர நிகணடு கூறுகிறது இதையும் ஒரு கலபம் எனவும கூறுவதுணடு. இககணககணககில் ஒரு பிரமனுக்கு

நூறு வயது. பிரமனின் பகல் நேரம தான் படைப்பு இரவு பிரளய காலம். இந்த பிரளயம் அபாந்தரம், நிமித்திரம், மஹாப்பிரளயம் என மூன்று வகைப படும். இந்தக் கல்பத்தின இடையே சுவாயம்புவம் தொடங்கி ரௌச்யர் வரை 14 மனுக்கள் ஆட்சி செய்கிறார்கள். இபபொழுது நடப்பது வைவஸ வதமன்வந்தரமாகும். இப்பொழுது பிர்மாவின் 51 வது வயதில் பகல் 10 மணி என்பார்கள். அதாவது த்விதிய பரார்த்தமாகும். ஆக இத்தகைய அருமையான வைதிக நூலகளுக்கு உரையிடும் பொழுது மிகவும் கவனமும, பல நூல்களில் ஆழ்ந்த அறிவும் வேண்டும். ஆழ்ந்து சிந்தித்தும் கருத்துக்களைப் பல நூல்களுடன் ஒப்பிட்டுப் பொருத்தியும் பொருள் கூறவேண்டும். இதனைச் சர்வசாகாப்ரத்யயந்யாயம் என்பார்கள். இக்கருத்தை மாமுனிகள் அருளும் பொழுது, "ஒரு வேதாந்தத்திலே ஒருவாக்யம் ஒரு அர்த்தத்தைச் சொன்னால், அல்லாத வேதாநதங்களிலும் சஞ்சரித்து.... அந்யோந்யம் விரோதம பிறவாதபடி...—சேருமவற்றைச் சேர்க்கை" என ஸ்ரீவசன பூஷண உரையில் அருளினார்.

வேதத்தை முற்பகுதி பிற்பகுதி என இருவகையாகப் பிரிக்கும் பொழுது, முதற்பகுதி கர்மகாண்டம். இப்பகுதியை உரைபோல் விளக்கவந்தன தர்ம சாஸதிரங்களாகும். இதனை வெளியிட்ட முக்கிய முனிவர்கள் மநு, அத்திரி, விஷ்ணு, ஹரீதர் கௌதமர், யாக்ஞவல்கியர் முதலானவர்களாகும். இந்த ஸம்ருதிகள் எனற தரும சாஸ்திரங்களுள் முக்கியமானவை 18 ஆகும். இவை செய்யுள் வடிவாகவும், சூத்ரவகையாகவும் இருக்கும். அடுத்து உத்தரகாணடம் எனற வேதந்தப்பகுதியை விளக்கப் புராண இதிஹாஸங்கள் எழுந்தன. 'இதிஹாஸ புராணங்களைக்கொண்டு வேதாந்தப்பகுதியை விளக்க வேண்டும்' என்ற பிரமாணவாக்கும் உண்டு. புராணங்கள் 18. இதிஹாஸங்கள் என்பன இராமாயணமும் மஹாபாரதமுமாகும். ஆக நேரிடையாக பாஷ்யங்களும், தனிநூல் வகையில் புராண இதிஹாஸங்களும் வேதங்களுக்கு உரைபோல் அமைந்தன.

(தொடரும்)




ஜோதிஷ விசாரதை
வி பிச்சையம்மாள்
பாண்டிச்சேரி-3

## மேஷம்

**அசுவனி, பரணி மற்றும கிருத்திகை முதல் பாதம்**

உங்களுக்கு முன்னேற்றம் என எது ஏற்பட்டிருந்தாலும் அது ஒன்று உங்களுடைய கடின உழைப்பினுலோ, அல்லது மனத்தளர்ச்சி இல்லாமல் எதிர் நீச்சல் போட்டதாலோதான் ஏற்பட்டதாக இருக்க வேண்டும்: எதற்காக இதை நினைவூட்டுகிறேன் என்ருல், இந்தப் புத்தாணடு அதாவது 1985 உங்களுக்கு மிகுந்த சோதனைகளைத் தந்து பககுவப்படுத்த வந்திருக்கும ஆண்டு என்றே சொல்ல வேண்டும். அதனுல் முன்ஜாக்ரதையாகவும், துணிச்சலாகவும் நீங்கள் இருக்க வேணடும்.

காரணம்:- இந்த ஆண்டு உங்களுக்குத் தொல்லைதர இருப்பவன் உங்கள ராசிக்கு அஷ்டத்தில் வரும சனி பகவான். தவிர உங்களுக்குத் தொந தரவு தர இருக்கும் இன்னெருவர் குருபகவான். எனவே சனியும், குருவும் சங்கடப்படுத்தாமல் இருக்க, நீங்கள் கடைப்பிடிக்க வேணடிய முன் எச்சரிக்கையைக் கூறுவது உங்களை அனுவசிய வம்பில் மாட்டிவிடாமல் தப்பித்துக் கொள்ளப் பெரிதும் உதவியாக இருக்கும். மாணவர்கள் கல்வியைத் தவிர மற்ற எதிலும் ஈடுபடாமல் இருத்தல் நலம் பயக்கும் உத்தியோகத்திலிருந்தால் வீணை அவதூறுகள் ஏற்படவாய்ப்பு உண்டு. கூட இருந்துகொண்டே குழிப்பறிப்போரின் தூப்போதனையினுல் தொநதரவு உண்டாகலாம். கவனக்குறைவு ஏற்பட்டு, அதனுல் சலன சஞ்சலம், இடமாற்றம், மேலதிகாரிகளின் கெடுபிடி போன்றவைக்கு உள்ளாகலாம். பெண்களாக இருந்தால் : புதிய சிநேகிதம், புதுப்பழக்கவழக்கங்கள், கணவருக்குத் தெரியாமல் செய்யும் காரியங்கள் முதலானவற்றை நிச்சயம் தவிர்க்கவேணடும். உறவினர் வார்த்தைகளில் குறிப்பாக திருமணமானவராயின் உங்கள் தகப்பனுர் சொல்வதிற்கூட முன்யோசனையோடு செவிசாய்க்காமல இருப்பது வீணை பொருள் விரயத்திலும், வீண் கோபதாப, பகையிலும் உங்களைச சிக்கவைக்காமல் காக்கும். கணவரோடு கருத்து வேற்றுமை கொள்ளாதீர். வியாபாரிகளுக்கு: தொழில அல்லது வியாபார விஸதரிப்போ அன்றி அதிக முதலீடு செய்வதோ,புதியவர்களிடம் ஒப்பந்தம் செய்து கொள்வதோ, புது வாணிபம் தொடங்குவதோ நஷ்டத்தையே தரும.

பொதுவாக இநத மேஷ ராசிககாரர்கள்தாம இந்த ஆணடு மிகுந்த ஜாக்ரதையாக இருக்க வேண்டும். மனை வாங்குதல், வீடு கட்டுதல் முதலியனவற்றைத தவிர்ப்பது நல்லது. தினமும் சூரிய உதயத்துக்கு முன் ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் ஸ்ரீ ஹநுமத்ஸஹஸ்ரநாமம், ஸ்ரீசனீஸ்வர காயத்ரி மஹாமந்திரஜபம் முதலியவற்றை விடாது பாராயணம் செய்ய வேணடும்.

## ரிஷபம்

**கிருத்திகை 2, 3, 4-ம் பாதங்கள, ரோகிணி மறறும் மிருகசிரஷம முதல இரண்டு பாதங்கள.**

சென்ற ஆண்டு நீஙகள் எதிர்பார்த்து எதிர்பார்த்து நடக்காமல் போய்விட்டவை இந்த ஆணடு நிச்சயம் நடக்கும். அதிலும் சனி தசை இப்போது உங்களுக்கு நடந்து கொண்டிருந்தால் சந்தேகமே வேண்டாம். எதிர்பாராத தனப்ராப்தி, க்ஷேத்ராடனம், வணடி வாகனம், மண் மனை வாங்குதல், சுபசோபன மங்கலச் சடங்குகள் நடத்தல், தீவிரமான கடவுள் பக்தி, பூஜை புனஸ்காரங்கள் இப்படிப் பலவும் சொல்ல வேண்டும். ஆணுக இருந்தால் உங்கள் மனைவியிடமும், பெண்ணுக இருநதால் உங்கள கணவரிடமும் கொஞ்சம் விட்டுக் கொடுதது முரணடு பிடிக்காமல் நடந்து கொள்ளுங்கள். நீங்கள் மாணவரா, கவலையே வேணடாம. துணிச்சலாகப படியுங்கள. வெற்றி உங்களுக்குத் தான. உதயோகஸ்தரா : உஙகளைப் பார்தது ஏற்கெனவே வயிறறெரிச்சல் படுவோர் இன்னமும் மனங்குமைவது போல அதிகாரிகளின் பாராட்டும உயர்வும கிடைக்கவும, விரோதிகளும் தாமே நட்பு நாடி வரும்படியும இருக்கும். பெணகளா. புத்ர பாகயம் உணடு. கணவரிடம் உங

கள் பேச்சுக்கு மறுபேச்சு கிடையாது, திருமண மாகாதவராக இருந்தால நல்ல மனைவி கிடைக்கப் போகிருள் செயதொழிலில் லாபமும், புதுக கூட்டுறவும உணடாகும். உழைப்புக்கு மேற்பட்ட ஊதியமும, பாராட்டும், பரிசுகளும கிடைககும. புகழ, மரியாதை பாராட்டு, புதிய நூலகள வெளியாதல், வெளியான உங்களின் நூல்களில் ஒன்றுககுப் பரிசு கிடைத்தல போன்றவை ஏற்படலாம. எநதக காரியமாயினும் சுகரஹோரை நேரத்தில செய்யுங்கள் சுபமாகவே முடியும். ஒன்றிரண்டு இடைஞ்சல்கள, மனைவியின் உடலநலக்குறைவு போன்றவை சிறிது தொல்லை தரலாம். இறையருள் காப்பாற்றும.

## மிதுனம்

(மிருக சிர்ஷம் 3, 4-ம பாதம், திருவாதிரை புனாபூசம் 1, 2, 3 பாதஙகள)

உங்கள் நெருங்கிய உறவினர் ஒருவரின உடல்நலம் உங்களுக்குககவலையைத் தந்து கொண்டிருக்கிறதா? விடுங்கள் கவலையை, விரைவில் நலம் பெறுவார். உங்கள் பெண் அல்லது பிள்ளையின் திருமணம் பற்றிய சிந்தனையா? அதுவும் வேணடாம் இந்த ஆணடு அந்த சுபத்தை ஏறபடுததித் தரப்போகிறது. மனை வாங்குவது பற்றியா அல்லது வீடு கட்டும் பணியில் முடககமா......... சுமுகமாகச சரியாகி விடும. இந்த செப்டமபரிலிருநது மளமள வென ஒவ்வொன்றுக நடககப் போகிறது. ஆனுல் ஒனறு. உஙகள தசாபுத்தி சரியில்லாமல இருப்பவர்கள மட்டும உரிய பரிகாரம் செய்தால அனுவசியத் தொநதரவுகள் இருககாது. இதுவரை "ஜாண ஏறினுல் முழம சறுககும்" என்ற வகையில உங்கள் நிலைமை முன்னும் பினனுமாக இருந்திருக்கும். ஆனுல் இனிமேல், இந்த ஆண்டிலிருநதுதான், நிலையான, சரியான முன்னேற்றம் உங்களுக்குத் தொடங்கப் போகிறது. போன வருஷம் உங்களுக்கு ஏற்பட்ட சோதனைகளையும், வேதனைகளையும, நீங்கள் போட்ட எதிர்நீச்சலையும் இப்போது நினைத்தாலும உஙகள மேலேயே உங்களுக்கு ஆச்சாயம நிறைந்த தன்னம்பிககை உணடாகும். உங்களில் சிலா வெளிநாடுகளுககுச செல்லும் அதிர்ஷ்டததைப் பெற இருக்கிறீர்கள. ஒரு சில மிதுன ராசிக்காரர்கள் இடமாறறம, பதவி மாற்றம், உதயோகஉயர்வு எனப பலவற்றைச் சந்திகக உள்ளீர்கள். சிலருககுத் திருமணப்ராபதியும், புத்ரப்ராப்தியும உண்டாகப்போகிறது தசா புக்தி சரியில்லாமல் இருக்கும் மிதுன ராசிக்காரர்களில் சிலர் மட்டும், குடும்பத்தில் பிரச்சனைகளைச சநதிகக வேணடி வரலாம. முன் யோசனைமிக்க நடவடிக்கையை மேறகொணடால் அவைகளையும் சமாளித்துவிடலாம. வசதிகள அதிகரிககும, வருமானம் பெருகும. சுப விரயமும ஏற்படும். வண்டி, வாகனம நூதன ஆடை ஆபரணச சேர்ககை ஏற்படும். பிரயாண காலங்களில் ஜாக்கிரதை வேணடும். அஷ்டமி, நவமி நாட்களில் கணடிப்பாகப் பயணம் செய்வதைத் தவிர்ப்பதும், புனர்பூச நக்ஷத்ர நாளில் பிரயாணங்களை மேற்கொள்வதும சுபம். சனிக்கிழமை விரதம் ஏறபது, திருமலை திருவேங்கடவனைத் தரிசிப்பது நலம் கொடுககும்.

## கடகம்

(புனர்பூசம 4 பாதம், பூசம் மறறும் ஆயில்யம)

புத்திசாலியான உங்களிடம, அவசரத தனமையும், நிதானக குறைவும் உள்ளது. சரிவர யோசிககாமல் ஆர்வ மிகுதியால செயவது தொல்லையைத் தருவிககும. அதே போல் பிறர் சொலலைக் கேட்டு அதன்படி நடபபதும தவறுன பாதைககுச் செலுத்திவிடும். சென்ற ஆண்டு சிற்சில நன்மையான பலன்கள் நடந்திருந்தாலும், ஒன்றிரணடு தோல்விகளும், ஏமாற்றங்களும் ஏற்பட்டிருக்கும். உஙகளில் சிலர், சொலல முடியாத மன வேதனைகளுக்கும், கோபதாபங்களுககும், உயிருக்கு ஆபத்தான நலக்குறைவுகளுக்கும உளளாகி இருக்கக்கூடும். தசா புக்தி நன்றுக உள்ள கடக ராசிக்காரர்களைத் தவிர, மற்றவாகள் வீணை விரோதஙகளுக்கும, போராட்டங்களுககும, தறகாப்பு முயற்சியிலேயே தங்கள் சக்தியை விரயமாக்குவதுமாகவே இருந்திருப்பீர்கள். இந்த ஆணடு அந்த அளவுக்குக் கஷடங்களோ, நஷ்டஙகளோ இருக்காது எனறுலும, "மழை விட்டும் தூவானம் விடவில்லை" என்ற நிலை நீடிக்கும. உங்கள் ஜென்ம நக்ஷத்ர நாளில் குருவுக்கும், சனிக்கும், செவ்வாய்க்கும் சாந்தி ஹோம பூஜை செய்வது நலத்தைக்கூட்டும், தொல்லையைத் தடுக்கும. சென்ற ஆண்டு உஙகளில் பலர் தொழில் மாற்றம், இடமாறறம், பதவி மாற்றம் போன்றவைகட்குத் தயாராக இருக்க வேண்டும. கணவன் அல்லது மனைவியின் உடல நலம பாதிக்கப்படக் கூடும். மண, மனை, வீடு, வாஹனம் போன்றவற்றில் விரயம் ஏறபடலாம் குடுமபத்தில் சுபவிரயம் உண்டாகும். வயதான உறவினர் பிரிய நேரிடும. எதிரிகள், வேணடாதவர்கள், உங்கள்மீது வெறுப்புற்றவர்கள் தொநதரவோ அல்லது உங்களை அவமானத்தில் சிக்கவைக்கவோ முயறசிககக்கூடும். எச்சரிக்கை முன் உணாவு உஙகளைக் காப்பாற்றும். உஙகளிடம் உதவி பெறறவர்களே உஙகளுககு விரோதமாகத் திருமபலாம். செவவாய் தசை நடக்கும் கடக ராசிககாரர்கள் ஜாககிரதையாக இருபபது நலலது. உஙகளில் சிலருக்கு உததியோக உயர்வும், எதிர்பாராத தனப்ராப்தியும், புகழும் ஏறபடும். எந்த முக்கிய காரியமாக இருநதாலும சந்திர ஹோரை பாாத்துச் செய்யும் பழக்கத்தை நீங்கள் கைக்கொள்வது மிகமிக நலம் பயக்கும்.

## சிம்மம்

(மகம் 4 பாதஙகள, பூரம் 4 பாதங்கள், உத்திரம் 1-ம் பாதம் வரை)

மற்றவர்களைவிட நீங்கள் கொஞ்சம் தன்மான உணர்வும், முன் கோபமும் அதிகம் உடையவர்கள். இந்தக் குணம் சில சமயம் உங்களைத் தலைக்கனம் பிடித்தவர்கள் எனத் தவறாகப் பிறரை நினைக்க வைக்கும். எந்த நேரம் எப்படிக் கோபம் உஙகளுக்கு வரும் என்பதே உங்களுக்குத் தெரியாது. தாட்சணயத்துக்கு அதிகம் கட்டுப்பட்டு அதனுல் தொநதரவை நீங்களே வலிய ஏற்றுக் கொள்வீர்கள். ''வெறும் புகழ் வெங்காய சாம்பாருக்குக்கூட உதவாது'' என்பது போல சென்ற வருடம உங்களுக்குப் புகழும், பாராட்டும நிறையவே கிடைத்திருக்கும். அதுபோல செலவினமும் தாராளமாக இருந்திருக்கும். சிலருக்கு நலக்குறைவு, மன உளைசசல, கருச சிதைவு, ஏமாற்றம் ஏற்பட்டிருக்கும். வேறு சிலருக்கு உறவினரால செலவு மிகுதியாக ஏற்பட்டிருக்கும் ஒரு சிலரின் கணவருக்குப பதவி உயர்வு, இடமாற்றம, ஊர மாறறம் ஏறபட்டிருக்கும். தசாபுகதி சரியில்லாத சிம்ம ராசிககாரர்களில சிலருக்கு கைககு எட்டியது வாயக்கு எட்டவில்லை என்ற நிலையில உதவி செய்தவரே கழற்றி விட்ட கதையில் ஏமாறறமே மிஞ்சி இருக்கும. சரி போனது போகட்டும். இநத ஆண்டு எபபடி இருக்கும்? மிகவும முன் ஜாக்கிரதையாக இலலாவிட்டால முதலுக்கே மோசம வரககூடிய தொல்லையான வருஷம் இது. உதயோக ரீதியில் பல சோதனைகளும், வேதனைகளும் உங்களுககு உணடாகலாம். அவமானம விளைவிககும கெட்ட பெயர் உண்டாகாமல் எச்சரிக்கையாக இருக்க வேணடிய காலம் இது. கணவன் மனைவியரிடையே சிலருக்குக் கருத்து வேற்றுமை, பூசல், சண்டை போன்றவை ஏற்பட்டுப் பிரியக்கூடிய அளவுக்கு வந்து பின ஆச்சர்யகரமாக சமாதானமாகும்.

மன நிம்மதி குறையும். நல்லவர்களையும், உஙகள் மேல் அனுதாபம உள்ளவர்களையும் அனுவசியமாகப் பகைத்துக கொள்ளுமளவுக்கு ஆத்திரமும், அவசர புத்தியும் உங்களைத் தொல்லையில் சிக்க வைக்கும். 58 வயதுடைய சிம்ம ராசிக்காரர்கள் என்றால அவவளவு கடுமை இருக்காது. எனறாலும உடல் நலத்தில கவனம் வேணடும். தினமும் புத ஹோரை நேரத்தில் விஷ்ணு காயத்ரி மற்றும் சனீஸ்வர காயத்ரி மந்தரங்களை ஜபித்து வருவது சிரமங்களின சுமை தெரியாமல் காப்பாற்றும்.

## கன்னி

(உத்திரம 2, 3, 4 பாதஙகள் ஹஸ்தம் மறறும சித்திரை முதலிரு பாதஙகள்)

ராஜ தநதிரம் தெரிந்த சாமாத்தியசாலியான உங்களுக்கு ஆசாபங்கம சிறிது ஏற்பட்டிருநதாலும் பொதுவாக சென்ற வருஷம் உங்களுககு நினைவில் இருககக்கூடிய நல்ல வருஷமாகவே இருநதிருககும். உங்கள் குடும்பத்தில் சுபகார்யம் நடநதிருககும், பதவி உயர்வு கிடைத்திருககும, செல்வாக்கும், புகழும் சேர்ந்திருக்கும், வருமானம அதிகமாகி இருக்கும், மனக்குறையும் இருநதிருக்கும். இத்த ஆணடு எப்படி இருக்கும் என்ற எதிர்பார்ப்பு மறற ராசிககாரர்களைவிட சறறு அதிகமாகவே உஙகளுக்கு இருக்கும்.

பொதுவாக நன்மைகள சற்று கூடுதலாகவும, தீமைகள கொஞ்சம் குறைவாகவும் இநத ஆண்டு இருக்கும எனபதே உங்கள் ராசிக்குரிய பொதுப்பலன் என்றாலும் உங்களில் சிலர் தற்போது இருககும் இடத்திலிருந்து வேறு இடத்துக்கு மாற்றப்பட இருப்பதைத் தடுக்கவோ, தவிர்க்கவோ இயலாமல் சிறிது சங்கடப்படுவீர்கள். வேறு சிலருக்குக் குடும்பப் பிரசசனைகள் தலைவலியைத் தரும் குழந்தைகள் ஆரோக்யம், மனைவியின் நலம் கவலையைத் தரும். மற்றும் சிலரின் குடும்பத்தில் சுப சோபன மங்கலச சடஙகுகள் நடக்கப் போகின்றன. 47 வயதை முடித்த கன்யா ராசிக்காரர்களில் சிலர் தாததா பாட்டி ஆகப்போகிறார்கள்; அரசியல் ஈடுபாட்டில் உள்ள கன்யா ராசிக்காரர்கள் சிலரின் முக்கியத்வம் இந்த ஆண்டு குறிப்பிடத் தகுந்ததாகவும், பரபரபபும் அதிகப் பொறுப்பு நிறைந்ததாகவும் இருக்கப் போகிறது.

வியாபாரிகளாக இருக்கும் கன்யா ராசிக்காரர்கள் இரும்பு, பெட்ரோல், டீசல், கரி, மின்சாதனங்கள், கட்டிட காண்ட்ராக்ட்டுகள், சிமெண்ட் போன்ற துறைகளில் கவனம் செலுத்தினால் சுலபமாகப் பணம் பண்ண முடியும். மாணவர்கள் உற்சாகத்துடன் கல்வியில் வெற்றி கொள்வார்கள். உத்யோகஸ்தாகள் இடமாற்றங்களைப் பெற்றாலும் பிரச்சனை இருக்காது. தாய்மார்கள் குழந்தைகள் விஷயத்தில் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்

## துலா

(சித்திரை 3, 4ம் பாதஙகளும்: சுவாதி மறறும் விசாகம 1, 2, 3ம பாதங்களும)

நீங்கள் எநத வயதுக்காரர்களாக இருந்தாலும் பரவாயில்லை; கவலையே வேணடாம் ஏனென்றால் ஏழரை நாட்டுச்சனியின் பிடிப்பில் இது கடைசி கட்டமான பரதசசனியின் காலம. இரண்டாவது சுற்றாகிய பொங்கு சனி நடந்துகொண்டிருப்போருக்கு இந்த வருஷம்தான் உருப்படியான நன்மைகளையெல்லாம் எதிர்பார்க்க வேண்டிய ஆண்டாகும். முதற் சுற்று ஏழரை நாட்டுச்சனியின் ஆதிக்கத்தில் இருக்கும் இந்த ராசியின் இளவயதுக்காரர்களுக்கு பிரச்னைகளும், மனச்சங்கடங்களும் இனி

கொஞ்சங் கொஞ்சமாகக் குறைய ஆரம்பிக்கும். பொதுவாக துலா ராசியைச் சேர்ந்த மாணவர்கள் இன்னமும் கூடுதலான கவனம் செலுத்த வேண்டும். வேடிக்கை, விளையாட்டு பொழுதுபோக்குகளில் அதிகம் ஈடுபடக்கூடாது. தேர்வு சமயத்தில் முழுமூச்சுடன் படித்துக் கொள்ளலாம் என்ற குருட்டு தைரியமும அலட்சியப்போக்கும் உங்களையறியாமலேயே உங்களிடம் தோன்றும். இதனால் தோல்வியே உண்டாகும். துலாராசியைச் சேர்ந்த உத்யோகஸ்தர்கள் மேலதிகாரிகளின் நனமதிப்பையும் ஆதரவையும் பெறுவார்கள். சிலருக்கு இடமாற்றம் தவிர்க்க முடியாத தர்ம சங்கடத்தை ஏற்படும். வேலையில்லாமல் உள்ள இந்த ராசிக்காரர்களில் பலருக்கு உத்யோகம் கிடைக்கும். அதே போல திருமண மாகாத துலா ராசிககாரர்கள் சிலருக்கு விவாகமாகும்.

இன்னும சிலருக்கு எதிர்பாராத தனயோகமும், வீடு வாங்கும் பாக்யமும், விலைஉயர்ந்த ஆடை ஆபரணச் சேர்க்கையும ஏற்படும். இந்த ராசியைச் சேர்ந்த கலைஞர்கள், கவிஞர்கள, வித்வான்கள் பலர் பாராட்டையும், கௌரவத்தையும, விருதுகளையும், பட்டஙகளையும பெறுவதோடு, பிரபலத்தை அடைவாாகள். இந்த ஆண்டு முழுவதும இநத ராசிக்காரர்கள் ஒவ்வொரு நாளும சுகரஹோரை நேரத்தில ஸ்ரீ மஹாலக்ஷ்மி காயதரி மந்த்ரத்தை ஜபித்தலோ அலலது ஸ்ரீலக்ஷ்மி அஷ்டகம, கவசமபோன்ற ஸ்தோத்ரஙகளை முழு நம்பிக்கையுடன் பாராயணம் செய்தலோ அதிருஷ்டயோகத்தை ஏற்படுத்தும்.

## விருச்சிகம்

(விசாகம் 4-ம பாதமும், அனுஷம் மறறும கேட்டை)

சற்று அமைதியும், அடக்கமும் பயந்த ஸ்வபாவமும் கொண்டவரான நீங்கள் சென்ற ஆண்டு அதாவது 1984-ல் பல பிரச்னைகளுக்கும உறவினர்களின் வயிற்றெரிச்சலுக்கும், கோபதாபங்களுக்கும் ஆளாகி இருக்கக்கூடும். இவற்றுடன் உடல் நலக் குறைவு, கருச்சிதைவு, கருவுறுதல் போன்றவையும, எதிர்பாராத சில நன்மைகளையும் அடைந்திருப்பீர்கள். உள்ளூர உங்கள் மேலேயே உங்களுககு ஒருவிதமான அவநம்பிக்கையும, தாழ்வு மனப்பான்மையும கூட இருக்கலாம். ஆனாலும் இந்த ஆண்டு அந்த அளவு அமைதிக் குறைசசல் இருக்காது. சிற்சில நன்மைகளுடன் ஒன்றிரண்டு பிடிக்காதவையும் நடக்கும. பிறக்கும போது மகர கும்பத்திலோ அல்லது துலாத்திலோ சனி இருக்கப் பிறநத விருச்சிக ராசிக்காரர்களாக நீங்கள் இருந்தால், நடப்பவை அனைத்தும் நல்லவனக்கே நல்லவைக்கே எனற நம்பிக்கையோடு நிர்ப்பயமாக இருக்கலாம். அதற்குரிய அறிகுறிகள் தென்படுவதை நீங்களே உணருவீர்கள். வியாபாரத்தில் ஈடுபட்டுள்ள விருச்சிக ராசிக்காராகளானால் உங்களின் வழக்கமான துறையைத் தவிர்த்து புதிய துறைகளில் நீங்கள் ஈடுபடும் படியான சூழ்நிலை அமையும. அது அரசு தொடாபுடைய காண்ட்ராக்டுகளாகவோ அல்லது சிமெணட், இருமபு, எலகட்ரிகல் சாமானகள், பெடரோல், டீசல், கெரசின் ஆயில் போனற சம்பநதமுடையதாகவோ இருநதால, அந்தத் துறையில அநுபவம உடையவரை கூட்டாளியாகவோ, அலலது பணியாளராகவோ சேர்த்துக கொணடு கவனமுடன் ஈடுபடுஙகள். இதுவரை கவனிதது வந்த வழக்கமான உங்கள துறையை விடவும், லாபகரமாக இருககும. விருச சிக ராசிப்பெணகளுக்குப் பொறுப்பு அதிகமாகும். உங்கள் கணவரின் அன்பு அதிகமாகும். சிலரின் கணவருக்கு வெளிநாட்டு உத்யோகம் அல்லது அதிகமான வருமானம், வசதிப் பெருக்கம் போன்றவை ஏற்படும். பணப்புழக்கம் தாராளமாகும அதே சமயம், அதற்குச் செலவு வைக்கவும், தவறான பாதையில் உங்களைச் செலுத்தவும் சம்மன் இல்லாமலேயே உங்கள் உறவினரில் சிலர் ஆஜராகக் கூடும். எச்சரிக்கை தேவை. அவசரபபட்டுப் பேசுதல், நெருங்கிய சொந்தக்காரர்கள் அல்லது நண்பர்களுடன் கருத்து வேற்றுமை ஏற்படாமல் பார்த்துக் கொள்ளல் மிக முக்கியம். உத்தியோகத்தில் இருப்பவர்கள மேலதிகாரிகளோடு மோதல் ஏற்படாமல் நடந்து கொள்வது நலம்.

## தனுசு

(மூலம், பூராடம், மற்றும் உத்திராடம் முதல் பாதம்)

அப்பாடா எப்படியோ ஒருமாதிரியாக உருண்டு, புரண்டு, தட்டுத் தடுமாறி 1985-க்கு வந்துவிட்டீர்கள். கடவுள் அருளினாலேயே நீங்கள் பல சோதனைகளிலிருந்து நிலையாக மெல்ல மெல்ல உறுதியாக ஓரளவு மீண்டு வந்திருக்கிறீர்கள். தசா புக்தி நல்ல நிலைமையில் அமைந்தவர்களைத் தவிர இந்த ராசிக்காரர்களில் பலர் கடன் படுதல், கைப்பொருள் இழததல், எதிரிகளின் தொல்லைக்கு உள்ளாதல், வேலை இழத்தல் அல்லது பதவியிலிருந்து இறக்கப்படுதல், இடமாற்றம், அவமானம், அலைச்சல், அகால உணவு, உடல் நலக்குறைவு, மன அமைதிககுறைவு, மனைவி அல்லது பிளளை சமபந்தமான ஆரோக்யம் பறறியான கவலைகள், வசதிகள் குறைதல், பிறரிடம் உதவிக்காக அலைதல்.. இப்படி பலவும் நேர்ந்திருக்கும். இநத ராசிக்காரர்களில் 20 வயதுக்குட்பட்டவராக இருந்தால் வீணான பிரச்னைகளில் சிக்கிக் கொள்ள நேரிடும்; 30 வயதுக்கு உட்பட்டவராக இருந்தால் அதிகமான வருமானம், வியா

பாரப்பெருக்கம், பதவிஉயர்வு, புகழ், பாராட்டு, சன்மானங்கள் என பல சுப மங்கல யோகங்களை எதிர்பார்க்கலாம். ஐம்பத்தைந்து வயதுக்கு மேற்பட்டவராக இருந்தால் கணவன் அல்லது மனைவியின் உடல்நிலை கவலைக்கிடம் தரலாம். இந்த ராசிக்காரர்களில் மேஷத்தை லகனமாகக் கொணடவராக இருந்தால் செய் தொழில் அபிவிருத்தியும் கீர்த்தியும பிள்ளைகளால் தொல்லையும்ஏற்படும். இதே ராசிக்காராகள் மிதுனத்தை லக்னமாகப் பெறறவர்கள் இநத ஆண்டு ஆகஸ்ட்டிலிருந்து பிரயாணங்களில் ஜாக்ரதையாக இருகக வேணடியது முக்கியமாகும். குறிப்பாக அறுவை கிகிச்சை போன்ற மருத்துவ உதவி தேவைப்படுவோர் தள்ளிப் போடுதல் நல்லது. ஒரு முக்கியமான முன்எச்சரிக்கை: இனிப்புப் பண்டங்கள் உங்களுக்கு மிகவும் பிடித்தமான ஒன்று என்றாலும் கூடுமானவரை இந்த ஒரு ஆண்டு மட்டுமாவது சாப்பிடாமல் இருப்பது நலம. அதே போல உங்கள் பலஹீனம், முகஸ்துதி பேசுவோர் வார்த்தைக்கு மயங்கி ஏமாந்து போதலும், வீண் ஆடம்பரத்திற்கும வெற்றுப் புகழ வார்த்தைகளுக்கும் விரயம் செய்தலுமாகிய இயல்பு. எனவே அனுவசியமான குளிர்சசி வார்த்தைகளைக் கேட்டு ஆபத்தில் சிக்கிக்கொள்ளாதீர்கள். இந்த ஆண்டு உங்களுக்கு அதிக வரும்படியும், எதிர்பாராத தனப்ராப்தியும் கிட்டும். உஙகளின் இளகிய மனத்தைப் தைப புரிந்து கொண்ட நெருங்கிய உறவினர்கள் உங்கள் ஆதாயத்தில் குளிர் காய்வார்கள். முன்யோசனை, சாமர்த்தியம், எச்சரிக்கை மூன்றுடனும் நடந்து கொண்டால் பிரச்சினைகள் உங்களுக்கு ஒரு பொருட்டே இடையாது.

## மகரம்

(உத்திராடம் 2, 3, 4ம பாதங்களும்; திருவோணம் மறறும் அவிட்டம் முதலிரு பாதங்களும)

மிகுந்த புத்தி சாலித்தனமும் எச்சரிககை உணர்வும் ராஜ தந்திரமும் உடையவரான உங்களையே இந்த கிருஹங்கள் சென்ற ஆண்டு ஒரு புரட்டு புரட்டி எடுத்திருக்கும். என்ன செய்தும் நல்ல பெயர் இருந்திருக்காது. கட்டுக்கடங்காத செலவும், விரோதிகளின் தொந்தரவுகளிலிருந்து தற்காத்துக் கொள்ளும் முயற்சியிலுமேயே உங்களின் சக்தியும், சமர்த்தும் வீணாகி இருக்கும். மன பீதியிலிருந்து மீள்வதே பெரும்பாடாக இருந்திருககும் சனி, குரு, செவ்வாய், போன்ற கிரஹங்கள் நல்ல நிலைமையில் ஜனன காலத்தில் அமையப் பெற்றவர்களும், புக்தி நாதன் அனுகூலமாக இருக்கப் பெற்றவர்களும் மட்டுமே தலைக்கு வந்தது தலைப்பாகையோடு போயிற்று என்ற கதையில் தப்பி இருப்பர். சரி, இந்த ஆணடு எப்படி இருக்கும் என்றால் மழை விட்டும் தூறல் ஓயாத நிலை தான். உடல் நலக்குறைவு ஏற்படலாம். ஊர் மாற்றம், இட மாற்றம், தொழில் மாற்றம், பதவி மாற்றம் என மாற்றங்கள் ஏற்பட இடமுணடு. மிக நெருங்கிய உறவினரும், நண்பருமே பிரிய நேரலாம். உங்கள் குடும்பத்தில் பிள்ளைக்கோ, பெண்ணுக்கோ திருமணம் நிகழக்கூடும். கட்டுக்கடங்காத செலவினமும், அதனால் கடன் சுமையும் ஏற்படலாம். தவிர கைக்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை என்ற நிலையில ஏமாற்றங்கள் ஏற்படும். எதிர் பார்த்தது எட்டிச் செல்லும். நினைப்பு ஒன்று நடப்பு வேறு என்று இருக்கும். மிக எளிதில் முடிய வேண்டியதுகூட அனுவசியமாக இழுத்துக் கொண்டிருக்கும். போன ஆண்டு வரிசையாக உங்களுக்கு ஏற்பட்டு விடட நஷ்டங்களையும் கஷ்டங்களையும் கெட்ட பெயர்களையும் ஒவ்வொன்றாகச சரி செய்வதே இந்த ஆண்டுக்கான உங்கள் வேலையாகும். ஆனாலும்கூட தீவிர முயற்சி, கடுமையான உழைப்பு, மனத்தளர்ச்சி அசையாத உறுதி, நம்பிக்கை குலையாத கடவுள் பக்தி இவைகளால் மட்டுந்தான் நீங்கள் மறுபடியும் மெல்ல மெல்லத் தலை தூக்க வேண்டும். பதட்டமும், ஆத்திரமும் வமபு, வழக்கு என உங்களை மாட்டி விடக்கூடும். முடிந்தால் உங்கள் பிறந்த மாதமும், நக்ஷத்ரமும் வருகின்ற பிறந்த நாளில் செவ்வாய் அல்லது சனிஹோரை நேரத்தில் குருவுக்கு கிரஹ சாந்தியும், ப்ரீதியும் செய்து விட்டு அன்றைய குருஹோரை நேரத்தில் ஸ்ரீ சரப ஹோம பூஜையும் நடத்தினால் பல இடைஞ்சல்களிலிருந்து நீங்கள் காப்பாற்றப்படுவீர்கள். முழுமையான இறை நம்பிக்கையுடன் எப்படியாவது இந்த ஆண்டை மெதுவாக நகர்த்தி விடுங்கள்.

## கும்பம்

(அவிட்டம் 3, 4ம் பாதங்களும்; சதயம் மற்றும் பூரட்டாதி முதல் மூன்று பாதங்களும்)

நட்புக்கும், உறவுக்கும் மிகவும் கட்டுப்பட்டவரான நீங்கள் மிகவும் பொறுப்பு தெரிந்தவர்கள். பம்பரமாகச் சுழன்று காரியங்களை முடிப்பதில் வல்லரான நீங்கள் வீண் ஆரவார ஆர்ப்பாட்டங்கள் செய்யத் தெரியாத அடக்கமானவர். உண்மையான அன்புக்கு உங்களையே கூட தியாகம் செய்யத் தாயராகக் கூடிய உங்களைப் புரிந்து கொண்டவர் ஒன்றிரண்டு பேர்தான் இருப்பர். ஜான் ஏறினால் முழம் சறுக்கும் நிலையில் கூட நீங்கள் சென்ற ஆண்டைதள்ளி விட்டீர்கள். இந்த ஆண்டு இதுமாதிரி இல்லை. இந்த வருஷம் சுபவிரயம் காத்திருக்கிறது. பொறுப்பு கூடும், வருமானமும் கூடும், செலவும்கூட

அதிகரிக்கும். அதே சமயம் சகோ தரர்களில் ஒருவர் பற்றிய கவலை சேரும். கோபதாபங்களைத் தவிர்ப் பதும், அபிப்ராய பேதத்துக்கு இடம் தராமலும் நடப்பது முக்கியம். புத்ர-புத்ரிகளால் மனத்துக்கு மகிழ்ச்சி யான நிலையும், கௌரவமும் உண் டாகும். பல பொது நிகழ்ச்சிகளில் பங்கேற்பீர்கள். ஆண்டின் ஆரம் பமே நம்பிக்கை ஊட்டுவதாக இருக் கும். நீங்கள் எழுத்தாளராக இருந் தால் உங்களின் ஆக்கங்கள் பரி சையோ பாராட்டையோ பெறும். நூல் வடிவில் வரவும் வாய்ப்புண்டு. உத்யோகஸ்தர் என்றால் உங்கள் தயவுக்காக உங்களைப் பலர் சுற்று வர். விவசாயியாக இருந்தால் அதிகப்படி நிலம் வாங்குதல், டிராக் டர் போன்றவை வாங்குதல் ஏற் படும். வியாபாரியாக இருந்தால் கூட்டு வணிகம் நஷ்டத்தைத் தவிர்க் கும். பெண்களாக இருந்தால் கணவ ருக்கு நல்ல அதிர்ஷ்டயோகம் ஆண்டு இது. பொதுவாக நல்லதும் கெட் டதும் கலந்த ஆண்டு இது. புத்ர பாக்யம் இந்த ராசிக்காரர்களில் சிலருக்கு இந்த ஆண்டின் சுபபலன்; உத்யோக உயர்வு இதே ராசிக்காரர் களில் வேறு சிலருக்குக் கிடைக்கக் கூடிய நற்பலன். மண்மனை வாங்கு தல், வீடு கட்டுதல், கிரஹப்ரவேசம் நடத்தல் போன்றவை இன்னும் சில ருக்கு நடக்க இருக்கும் நன்மைகள். ஒரு சிலருக்கு சகோதரா, மனைவி வழி உறவினர் முதலானோரால் செல வினம் உண்டாகும்.

## மீனம்

(பூரட்டாதி 4-ம் பாதம், உத்திரட்டாதி மற்றும் ரேவதி)

காட்சிக்கு எளியர், கடுஞ்சொல் லர் அல்லர், சிக்கனத்தை விரும்பு பவர், பெருந்தன்மை மிக்கவர். என் றாலும் சென்ற ஆண்டும், அதற்கு முந்தைய ஆண்டும் கிரஹங்கள் செய்த சோதனையின் வேதனையை நீங்கள் மட்டும்தான் அறிவீர்கள். உங்கள் மன அமைதி குலைந்ததும், அலைச்சலும் எல்லாம் இருந்தும் எது வும் பிடிக்காத சூழ்நிலையும், அகால உணவும், அகாத செலவும், மிக நெருங்கியவரின் பிரிவும் இப்படி அடுக்கடுக்கான அலை அலையான கஷ் டங்களின் பிடிப்புகளிலிருந்து இனி மேல்தான் ஒவ்வொன்றாக நீங்கள் விடுபட வேண்டும். படிப்படியாக உங்களைச் சூழ்ந்து கொண்டிருக்கும் கவலை எனும் கருமேகங்கள் இனி விலக ஆரம்பிக்கும். மன வேற்று மையினால் பிரிந்த நண்பர்களும், உற வினரும் உங்களைத் தேடி தாமே வரு வர். சஸ்பென்ஷனில் இருக்கும் உத்யோகஸ்தருக்கு விடிமோக்ஷம் ஏற்படப்போகிறது. வேலை போன வர் இனி புதிய பணியில் சேருவர். வேலையற்றோரில் சிலருக்கு வேலை கிடைக்கும்; சிலர் தாமே சுயமாகத் தொழிலில் ஈடுபடுவார்கள். நஷ்டம் நஷ்டம் எனத் தாங்க முடியாமல் இழுத்துச் சார்த்திவிட்ட தொழிற் சாலையை மீண்டும் திறந்து தொழில் தொடங்குவதற்கான பிரகாசமான வாய்ப்புகள் புலப்படும். ஏற்பட்டு விட்ட கடன் சுமையின் அழுத்தமும் பாரமும் குறையத் தொடங்கும். கோளாறுகிவிட்ட உடல் ஆரோக்கி யம் சீர்படும்.

குழந்தை பாக்கியம் இல்லாமல் மன அமைதி இழந்து தவிக்கும் மீன ராசிக்காரர்கள் தங்கள் ஜென்ம நக்ஷத்ர நாளின் குருஹோரை நேரத் திலோ அல்லது எந்த ஒரு வியாழக் கிழமையாவது காலை 6 மணிக்குமேல் 7 மணிக்குள் குரு-செவ்வாய்-சனி-ராகு-கேது ஆகிய ஐந்துக்கும் கிரஹ சாந்தி பூஜை செய்து ஒரு மண்டலத் துக்கு ஸர்வ மங்களா மஹாயந்த்ர பூஜை முடிக்க நிச்சயம் கவலை தீரும். அடுத்த ஆண்டின் நற்பலன்களுக் கான அடித்தளமே இந்த ஆண்டு நடக்க இருப்பவை. முடிந்தால் தினமும் குருஹோரை நேரத்தில் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தியை வழிபடு வதும், தக்ஷிணாமூர்த்தி கவசம், ஸஹஸ்ரநாம ஸ்தோத்ரம் போன்ற வற்றைப் பாராயணம் செய்வதும் மிகுந்த பாதுகாப்பை அளிக்கும்.

பொதுவாக, இந்த ஆண்டு முழு துமே "குரு" நீசமாக விளங்குவது வது சற்று ஸவாரஸ்யக் குறைச்சல் என்பதால் எல்லா ராசிக்காரர் களுமே "குரு" கரஹத்தை வழிபாடு செய்வதும், தோத்திரங்களைக் கூறு வதும் தீய வழிக்குச் சென்று விடா மல் தடுத்துப் பாதுகாக்கும்.



## சிதம்பர ஸ்தல பெருமை

சிதம்பரத்திற்கு 'தில்லை' என்ற மற்றொரு பெயரும் இருக்கி றது. அங்கே தரிசனம் செய்வதற்குப் போக இயலாவிட்டால் கூடக் கடவுள் தன் பக்தனுக்குக் கருணை காட்டுகிறார். எப்படி என்று கேட்கிறீர்களா?

உங்களை யாராவது 'சிதம்பரம் போனதுண்டா?' என்று கேட் டால் 'நான் போன—தில்லை' என்று கூறுவீர்களே! அப்படி ஒரு பெருமையை இத்தலத்திற்கு மட்டும்தான் இறைவன் ஏற்படுத்தியி ருக்கிறார்.

கூறியவர். புலவர் கீரன்.

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY, MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

Regd. No. B/TRP/12 வருடச் சந்தா ரூ. 12



# எங்கள் புத்தாண்டு வாழ்த்துக்கள்